உ

தெய்வமேதுணை.

ஓம் குருநாதன்முன்னிற்க.

# நாரதர் கலகம்.

## இரண்டாம்பாகம்.

## விலை அணா - 6.

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியார்

அவர்கள் இயற்றப்பட்டது

தமது சென்னை:

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.



நெ 8 சட்டணநாய்க்கன்தெருவு சூளை மதராஸ்.

1911

உ

கடவுள் துணை.

# நாரதர் கலகம்.

## இரண்டாம் பாகம்.

இஃது,

இரண்டாம்பதிப்பு 

விலை அணா - 6.

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களா லியற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

 Copies 1000.

நெ 8 சட்டணநாய்க்கன் தெருவு சூளை மதராஸ்,

1910.

# ரிஜிஸ்டர் காபிரைட் அரிவிப்பு.



இதனால் சகலமான புத்தக வியாபாரிகட்கும் அச்சுக்கூடத் தலைவர்கட்கும், தெரிவிப்பது யாதெனில் 1847-ம் ௵த்திய இந்துதேசத்து காபிரைட் என்னும் கிரந்த சுதந்தர ஆக்டின்படி ரிஜிஸ்டர் காபிரைட்டு செய்திருக்கிறபடியால் என்னுடைய அநுமதியின்றி யாரும் யெவ்வித முகாந்தரத்திலும் அச்சிடக்கூடாது.

சென்னை }
12-11-1910. }

இப்படிக்கு
சிறுமணவூர் - முனிசாமி முதலியார்.



இவைமுழுதும்
சிறுமணவூர் முனிசாமிமுதலியார்ப்திப்புகள்.

# புதியபுத்தகவிளம்பரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மூலிகைமர்மம் முதற்பாகம் | விலை | அணா | 0 | 8 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை நான்குபாகமும் ஒரேகட்டடம் புல்காலிகோபைண்டு | | ரூபா | 2 | 0 | 0 |
| நாரதர் கலகம் முதற்பாகம் | விலை | அணா | 0 | 6 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்குபாகமும் ஒரேகட்டடம் புல்காலிகோ பைண்டு | | ரூபா | 1 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை முதற்பாகம் | விலை | அணா | 0 | 6 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்குபாகமும் ஒரேகட்டடம் புல் காலிகோ பைண்டு | | ரூபா | 1 | 8 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி | விலை | ரூபா | 2 | 0 | 0 |
| ஷை இங்கிலீஷில் | ,, | ,, | 2 | 0 | 0 |
| இங்கிலீஷ்தமிழ்வயித்தியசிகாமணி | ,, | ,, | 3 | 0 | 0 |
| ஜோதிடசிகாமணி மூலம் உரை | ,, | ,, | 3 | 0 | 0 |
| சண்டாளர் சகவாசம் | விலை | அணா | 0 | 8 | 0 |
| தெய்வகுண வெளிச்சம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| அகடவிகட சம்சாரி | ,, | ,, | 0 | 4 | 0 |
| விவாகசாஸ்திரம் | ,, | ,, | 0 | 4 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| [illegible]ரீரசாஸ்திரம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| விஷவயித்திய சிந்தாமணி | ,, | ,, | 0 | 12 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 12 | 0 |
| கொழுத்தச் சிறிப்பு | ,, | ,, | 0 | 6 | 0 |

இன்னும் அனேக தினுசுகளுண்டு.



உ

கடவுள் துணை.

# நாரதர் கலகம்.

## இரண்டாம்பாகம்.

---

### சுந்தராங்கியின் சரித்திரச் சுருக்கம்.

தேவலோகத்தை அரசாட்சி செய்துக்கொண்டிருக்கும் அமரேஸ்வரனென்னும் அரசனானவன் அவனுடைய மூதாதைகள் காலந்துடங்கி யாதொரு மனக்கிலேசமில்லாமலும் ரிஷிகளாலும் தேவராலும் சாபசம்பந்த மில்லாமலும் மனுநீதியென்னும்வேலி யைத் தாண்டாமலும் அருளிலும் பொருளிலும் மனைவிகளிலும் மக்களிலும் குறைவில்லாமல் நிறைந்தசமுத்திரம்போல் கரையற்ற மனமுடையவனும் நித்தியகாலமும் அப்சரஸ்திரீகளால் சபாஅல ங்கிருதனும் மங்காதகீர்த்தியுடன் செங்கோல் செலுத்தும் அமரே ஸ்வரன் சபாமண்டபத்தில் (அழையாவீட்டுக்கு நுழையாச் சம்ம ந்திபோல்) நாரதமுனிவன் வந்து நுழைந்தான் தன் சபையின்கண் வந்த நாரதமுனிவரை அமரேஸ்வரன் பார்த்து நமஸ்காரஞ் செய்து பொற்பீடமளித்து சொல்லுகிறான் ஸ்வாமீ அடியேன் மீது கிருபாநோக்க முண்டாகி இவ்விடம் தாங்க ளெழுந்தருளி யது அடியேன்செய்த புண்ணியமோ வென்மூதாதைகள் செய்த தவப்பயனோ அறியேன் திரிலோக சஞ்சாரியாகிய தமது திரு வாக்கால் ஆசீர்வதிக்கப் பெருவேனென்று வணங்கினான். அப் படிவணங்கிப அரசனுடன் ஏதோ நலல வார்த்தைகள் பேசிக்

கொண்டிருந்த பெரியோருக்குள் வழக்கம்போல ஆசிர்வாதஞ்
செய்துவந்த வேலையைப் பார்த்துக்கொண் டெழுந்துபோகாமல்
(சும்மாயிருக்குஞ்சங்கை ஊதிக்கெடுத்தான் ஆண்டி) என்னும் பழ
மொழிபோல் அரசனைப்பார்த்து நாரதன் சொல்லுகிறன் அப்பா!
அமரேஸ்வரா உன்னுடைய பேரும் பெருமையும் பிரக்யாதியும்
தேவலோகத்தில் மட்டும் பிரகாசிக்குமென்றிருந்தேன்.

யாதோ ஒருகாரியமாய் சிலநாளைக்குமுன் பூலோகத்திற்குப்
போயிருந்தபோது உன்னையும்உன் வர்க்கத்தானுகிய அதிகுணனை
யும் பூலோகமெல்லாம் புகழ்ந்துக்கொண் டிருக்கிறார்கள் இதுவு
மன்றி அனேகதவ முனிவர்களும் உமது அரசுரிமைக்கு மெச்சி
உம்மைத் தெரிசிக்கவேணுமென்று ஆவல் கொண்டிருக்கிறார்கள்
மேலும் பூலோகப் பெருமையும் சிறப்பும் சிங்காரமும் சொல்லு
கிறேன் கேளென்று அதிவினேதமாகப்புகழ்ந்துப் புகழ்ந்து போ
தித்து மேலும் அப்பேர்க்கொத்த உலகத்தைச் சஞ்சாரஞ் செய்
துவந்தால் அந்தந்த உலகத்தில் வசிக்கும் நல்லோர் பெரியோர்
கள் பரிசமும் திருஷ்டியும் அரசர்களுக்குப் படுமாயின் இன்ன
மும் எக்காலமும் துக்கமில்லாமல் அரசாட்சி செய்யலாமென்று
நாரதன் பேச்சிய பேச்சுக்களை அந்த சபையிலிருந்து கேட்டுக்கொ
ண்டிருந்த அதிகுணனும் அவன் மனையாளும் பூலோகத்திற்கு
வந்து ஆங்குள்ள வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு மீண்டுந்
தன்னகர்செல்லுங்கால் இடையில் ஓர் தபோவனமானது தோன்
றப்பட்டு அதற்குள் இவாள் பிரவேசித்துச் செல்லுகையில் அவ்
விடத்தில் யாதவமகாரிஷி தவம்பண்ணிக்கொண்டிருக்க அவரு
டைய கோரரூபத்தை இவாள்கண்டு நகைக்க அதைக் கவனித்து
அந்தரிஷி இவாளுக்கு கொடிய சாபத்தைக்கொடுக்க.

அச்சாபத்தைப் பெற்றுக்கொண்டு அதிகுணன் குஷ்டரோ
கியாயும் சுந்தராங்கி காஸ்மீரதேசத்திராஜன் புத்திரியாயும் ஜெ
னித்து பப்றதேசத் தரசனுகிய சிதானந்தமகாராஜனுக்கு இளைய
மனையாளாகி வாழ்ந்து வரும்நாளில் ஓர்நாள் அரசனும்இப்பெண்
ணுமாக குடிகளிட்ட பயிர்களை யெல்லாம் காட்டு மிருகங்கள்
வந்து அழித்தபடியால் குடிகள்வந்து முறையிட அதைக் கேட்ட
அரசனும் பத்தினியும் மந்திரி சயினியங்களுடன் வேட்டைக்குச்
செல்லுங்கால் அப்பெண்ணை ஓர் கூடாரத்தில் வைத்துவிட்டு அர
சன் தன் மந்திரிகளுடன் வேட்டையாட அதிலோர் மானனது

தவறி யோட அம்மானுடன் இவர்கள் பின்பற்றிச் செல்ல அது ஓர் மகரிஷியின் ஆசிரமத்திற் கொண்டுபோய் விட அப்போதும் இவர்களுக் கெல்லாம் தாகவிடா யதிகரித்து தத்தளிக்கின்ற சமயத்தில் அங்கோர் தடாகமானது இவர்களுக்குப புலப்பட அங்கு சென்று இவர்களுடைய தாகவிடாயைத் தணித்துக்கொண்டு அவடத்திலேயே சற்றுநேரஞ் சயனித்துக்கொண்டார்கள்.

பிறகு கூடாரத்திலிருந்த சுந்தரவடிவாள் தனதரசன் இன்னம் வரவில்லையே யென்று வெளியே வந்து வழியைப் பார்த்துக்கொண்டு நிற்கிறபோது மேற்சொல்லிய குஷ்டரோகி அவ்விடம்வர அவனைக்கண்ட சுந்தரவடிவாள் அவன்பேரில் மையலாகி அவனோடு கூடிக்கலந்து சொல்லுகிறாள் நீபப்பிரநாட்டிற்கு அருகாமையிலுள்ள பால்மண்டபமொன் றிருக்கிறது நீரவ்விடம் வந்தால் நான் பிரதிதினமும்வந்து உன்னுடன் கூடிக்கலந்து நல்ல சுகத்தையடைந்துவிட்டு யென்னகர் செல்லுகிறேனென குஷ்டரோகியும் அதற்கிணங்கி அம்மண்டபத்தில் வந்திருக்கப் பின்பு அரசுன் தன்சைனியங்களுடன் புறப்பட்டு வந்து கூடாரத்திலிருந்த தன் இளையமனையாளையு மழைத்துக்கொண்டு தன் னகர்வந்துசேர்ந்து தனது மூத்த மனையாளுடன் காட்டில் நடந்தவிசேஷங்களை யெல்லாம் சவிஸ்தாரமாய்ச சொல்லிப் பின்புஅமுதருந்திப் பள்ளியறை சேர்ந்தான் பின்பு சுந்தரவடிவாள் காட்டிற் கண்ட குஷ்டரோகியைத் தேடிச் சென்று அவனுடன் கூடிக்கலந்து சுகத்தை அடைந்துக்கொண்டு வருகிறாள் இப்படி வருங் காலையில் ஓர்நாள் அரசன் இவளுடன் சரசமாய் விளையாடி மல்லிகைச் செண்டை யெடுத்து பன்னீரில்நனைத்து அவளது ஸ்தன்னியத்திலடிக்க அவள் அந்த அடியைப் பட்டமாத்திரத்தில் இடி விழுந்ததைப்போல் சோர்ந்து பூமியில் விழுந்துவிட்டாள் பிறகு அரசன் இதைக்கண்டு ஆச்சரியப்பட்டு அவளது சோகத்தை மாற்றிச் சமீபத்தில் படுக்கவைத்துக்கொண்டு தூங்குகிறவனைப்போலிருந்தான் பின்பு சுந்தரவடிவாள் அரசன் நித்திரை செய்துவிட்டானென் றெண்ணி குஷ்டரோகிக்கு வேண்டுமான பண்டு பலகாரங்களை யெடுத்துக்கொண்டு அவ னிருக்குமிடம் செல்லும் போது அதிக இருளாயிருந்தபடியால் அப்பாதையில் உதிர்ந்து கிடக்குஞ் சருகுகளைச்சேர்த்துத் தீயிட்டு அதிலுண்டாகும் வெளிச்சத்தால் பாதையைக் கண்டுபிடித்து குஷ்டரோகி இருக்கு

மிடம் செல்லும்போது அரசன் இவள் வெளியே போகிறதைக் கண்டு இதைநாம் பரிசோதிக்க வேண்டுமென்று அரசன் பின்பற்றிச்சென்று அங்கு நடந்த விசேஷங்களையெல்லாம் பார்த்துக் கொண்டுபோக சுந்தரவடிவாள் குஷ்டரோகி இருக்குமிடம் சென்றவுடன் அவளைக்கண்ட குஷ்டரோகி அடி நான் பசியா யிருப்பேனென்று தெரிந்தும். நீ இன்னேரவரையில் வாராதிருந்தா யல்லவா வென்று அதிக சினங்கொண்டு தனது கோலால் அவளை அடித்தான்.

அவளந்த அடியைப்பட்டுக்கொண்டு தனது இருநேத்திரங்களிலும் நீர் சொரிய அவனுக்கிதமான வார்த்தைகளைச் சொல்லித் தான் கொண்டுவந்த உணவுகளை யெல்லா மவனுக்களித்து அவனோடு கூடிச் சுகித்துத் திரும்பிவரப் பின்பு அரசன் இவைகளையெல்லாங் கவனித்து மகா கோபத்தோடு அவளுக்கு முன்னுதாகவே தான்வந்து சயனித்துக்கொண்டான் பின்பு இவளும் அரசனுடைய சமீபத்தில் வந்து படுத்து நித்திரை செய்துக்கொண்டாள் பொழுது விடிந்தவுடன் அரசன் சிம்மா சனாதிபதியாய் கொலு வமர்ந்திருக்குஞ் சமயத்தில் அரசன் கொலுவில் வழக்கப் பிரகாரம் வந்து சங்கீதம்பாடக்கூடிய மோகனையென்னுந் தாசி அன்றையதினமும் வந்து பாட அரசனதை நிறுத்தி இவிடத்திலுள்ள யாருக்காவது அம்பலத் ததிசயம் பாடத்தெரியுமா வென்று கேட்க அவிடத்திலுள்ள எல்லோரும் யாதொன்றும் சொல்லாதபடி சும்மா யிருந்துவிட்டார்கள் பின்பு மோகனையாகிய தாசி நான் ஒருவாரத்திற்குள் வந்து பாடுகிறேனென்றுஅரசனை விடைகேட்க அப்போது அரசன் அப்படி நீ ஒருவாரத்திற்குள் வந்து பாடாவிட்டால் உன்னை சிரச்சேதஞ் செய்வனென்று சொல்ல அப்படியே யாகட்டுமென்று ஒப்புக்கொண்டு வந்ததாசி ஒருவாரமாகியும் பாடத்தெரியாமம் வியாகூலப்பட்டுக்கொண் டிருக்கப் பின்பு கலிங்கதேசாதிபதியாகிய யாதவமகாராஜன் தனக்கு நெடுங்காலமாய் புத்திரனில்லாததைப்பற்றி மெத்தவும் வருத்தப்பட்டு தனது மந்திரியினிட முரைக்க மந்திரி சொல்லுகிறான் சுவாமி தாங்கள் காட்டிற்குச் சென்று பஞ்சாக்கினி மத்தியில் நின்று ஈஸ்வரனைக்கோறி தவஞ்செய்தால் அவர் உன் தவத்திற் கிரங்கி உனதிஷ்டத்தைப் பூர்த்திசெய்துவிட்டுப் போவாரென்று சொல்லவேஅப்படியேஅரசன் காட்டிற்குச்சென்று பஞ்சாக்கினி மத்தியினில்நின்று தவஞ்செய்ய ஈஸ்வரன் ரிடபவாகனருடராகத்

தானே வந்து புத்திரசந்தான மளிக்கப் பின்பு அரசன் தன்னகர் வந்துசேர்ந்தான்.

அரசனுக்குஈஸ்வரனளித்த வரத்தின் மகத்துவத்தினல் அவனுடைய மனைவியாகிய செண்பகவதி அதுவேமாதம் கர்ப்பவதியாயிருந்து பத்துமாதமுஞ்சென்று கோடிசூரியப்பிரகாசம்போல ஓர் சற்புத்திரனைப்பெற்ருள் ஈன்ற அப் பிள்ளையை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவந்து ஐந்தாம்வயதில் தனதுபுத்திரனுகியகேசரியையும் யிம்மந்திரிபுத்திரனுகிய மதிவதனனையும் தளகர்த்தன் புத்திரனுகிய மதிகுணனையும் தண்டத்தலைவன் புத்திரனுகிய ஜெயசூரனையும் ஆக இன்னல்வர்களையும் பள்ளியில் வைக்க அவர்கள் யெல்லா வித்தைகளிலும் தேர்ச்சியடைந்தவர்களாய் ஓர்நாள் தங்களுடைய சாமார்த்தியங்களையெல்லாங் கண்டறியவேண்டுமென்று தங்கள் தங்கள் தாய் தந்தையர்களை அழைத்துக்கொண்டு தங்களுடைய உத்தியான வனம் வந்து அரசகுமாரன் ஓர் பெலாவிருக்ஷத்தை எரியும்படிப் பாட மந்திரிகுமாரன் அதைத் தழைக்கும்படி பாட தளகர்த்தன்குமாரன் அவ்விருக்ஷத்தி லுள்ளமலர் பிஞ்சு முதலாகியதுகளெல்லாம் உதிரும்படிபாட தண்டத்தலைவன் குமாரான் முன்னிருந்தபடி போய் ஒட்டிக்கொள்ளவேண்டுமென்று பாட இப்படியாக ஒருவர்க்கொருவர் உயர்வு தாழ்வில்லா திருப்பதைக் கண்ட அரசகுமாரன் நாம் நால்வரும் பலதேசங்களிலும் சென்று நமது வித்தையினுடைய சாமர்த்தியங்களை யெல்லாம் காட்டி அதினல் அனேக பரிசுகளைப்பெற்று திரும்பவும் நமது நாட்டையடையலாம் வாருங்களென்றழைக்க அப்படியே தங்கள் தங்கள் தாய் தந்தையர்களிடம் விடை பெற்றுக்கொண்டு அனேக தேசங்களை யெல்லாஞ் சுற்றிக்கொண்டு கடைசியாக பப்ரநாட்டிற்கு வந்து ஓர் வேதியர் வீட்டில் இறங்கியிருக்கப் பிறகு அரசகுமாரனுகிய கேசரியானவன் தனது மந்திரிகுமாரனை அழைத்து நாமிருவரும் இவ்வூருக்குட் பிரவேசித்து ஆங்குள்ள வேடிக்கைகளைப் பார்த்துவரலாம் வாவென்றழைக்க அவனுமதற்கிணங்கி இருவரும்புறப்பட்டு மேற்சொல்லிய மோகனுளாகிய தாசி வீட்டின் வழியாக வருகிறபோது அவளது ரூபத்தைப்போல் படமெழுதிவெளியிற் கட்டியிருக்கிற அவளுடைய வடிவத்தை அரசகுமாரன் கண்டு அவள்மீது மோகங்கொண்டு அவளது கிரகத்திற்சென்று அங்கு போய் நின்று தனது வரவைத்தெரிவித்தான் அச்செய்தி யறிந்த

மோகனாள் தன்னிடத்திலிருந்த இரண்டு தாதிப்பெண்களை அல
ங்கரித்து அரசகுமாரனிட மனுப்ப அதையறிந்த கேஸரி உன்
யெஜமானியை வரச்சொல்லென்று சொல்லி யனுப்ப அச்செய்
தியை யறிந்தமோகனாள் தான்விசனப்பட்டுஅடடா நமக்குயென்
னவிதியேற்பட்டது பார்த்தையா நாமோ இதுவரையில் கற்ப
ழியா திருந்தோம் நாளையத்தினமோ நமது சிரசும் போய்விடப்
போகிறது இப்போது நமது கற்புக்கும் பங்கம் வந்துவிட்டது
யென்று துக்கப்பட்டுக்கொண்டு அரச குமாரனிடம்வர அப்போ
து அரசகுமாரன் அவளைப்பாடச்சொல்ல அவள்சோகரகமாய்ப்
பாட அப்போதுகேசரி சொல்லுகிறான் அடி பெண்ணே நீயென்
ன இப்படி பாடுகிறாய் உனக்கு வந்தகஷ்டம் யாது அதை தெரி
விப்பாயாகில் அவ்வித கஷ்டத்தை தீர்க்கிறே னென்றுசொல்ல
அப்போது தாசியாகியமோகனாள் நான் இராஜசமுகத்தில் அம்ப
லத்ததிசயம் பாடுகிறேனென்று சொல்லிவந்தேன் வந்து ஒரு
வாரமாயிற்று இன்றையவரையிலும் ஒன்றுந் தெரியவில்லை இப்
போது இந்தராச்சியத்தில் ஐம்பத்தைந்துதேசத் தரசர்களும்
வந்திருக்கிறார்கள் நாளையதினம் நான்போய் இராஜ சமுகத்தில்
பாடாவிட்டால் யெனதுசிரசு போய்விடுமென்றுசொல்ல அதை
க்கேட்ட கேசரி நீ யாதென்றுக்கும் பயப்படவேண்டிய தில்லை
யான் பாடித்தருகிறேன் யென்று சொல்லிப் பாடிக் கொடுக்க
அதை யெழுதிக்கொண்டு அவனை தந்திரமாய்க்காவலர்களைவிட்டு
வெட்டி அடக்கம் செய்துவிடச் சொல்ல அப்படியே அவர்கள்
செய்யப்பின்பு தாசி விடிந்தவுடன் இராஜசமுகத்தில் வந்து அக்
கவியைப்பாட அதைக்கேட்டரசன் இக்கவி பெண்பால் வாக்கிய
மல்ல இது ஆண்பால் வாக்கியமாய்த் தோற்றப்படுகிற தென்று
சந்தேகப்பட்டுக்கொண்டிருக்கும்சமயத்தில் மந்திரிகுமாரனாகிய
மதிவதனன் அரசகுமாரனைக் காணாமையால் தண்டத் தலைவன்
குமாரனைவிட்டு அழைத்துவரச்சொல்ல அவன் அரசகுமாரனை
யெங்குந்தேடிக் காணாமையால் இராஜசமுகம் வந்து தேடிப்பார்
க்க அரசன் அவனைக்கண்டு உனக்கு அம்பலத்ததிசயம் பாடத்
தெரியுமாவென்று கேட்க பாடத் தெரியுமென்று பாட அரசன்
அதைக்கேட்டு சந்தோஷப்பட்டு அவனைச்சிறையில்வைக்கபின்பு
மற்றிருவரும்வர அவாளையுமப்படிசெய்து இன்னால்வர்களிலொ
ருவன் தான் இக்கவியைப் பாடிக் கொடுத்திருக்க வேண்டும்
இவாள் பாடிய கவிக்கும் தாசிபாடிய கவிக்கும் வித்தியாசமின்றி

ஒத்திருக்கிற தாகையால் இவளை இந்தப்படிகேட்டால்உண்மையை வெளியிடமாட்டாளென்று நினைத்து அவளை அதட்டிக்கேட்க அப்போது அத்தாசி உண்மையை வெளிபிட அதைஅறிந்த அரசன்அச்சவத்தைக்கொண்டுவரச்சொல்லஅவளப்படியேகொண்டுவர மந்திரி குமாரனாகிய மதிவதனன் அச்சிரசையும் உடலையும் சேர்த்து அவனை உயிர்பெற்றெழும்படிபாட அவனு மப்படியே தூங்கி விழித்தெழுந்தவன்போல் எழுந்து நிற்க உடனே சிதாநந்த மகாராசன் தாசியாகிய மோகனாளைக் கழுவிர்போட்டு குஷ்டரோகியையும் சுந்தரவடிவாளையும் அரசன் சம்மாரஞ்செய்ய அவர்க ளிருவரும் பழையபடி கந்தர்வர்களாகிப் பொன்னுலகமடைந்தார்கள்.

பின்பு சிதாநந்தமகாராஜன் தனதுமூத்தமனைவியாள்புத்திரியாளாகிய கலாவதியை கேஸரிக்கிக் கல்யாணஞ்செய்துகொடுத்து தனது ராச்சியத்தையும் அவனுக்கே பட்டங்கட்டிவைத்து அவிடம் வந்திருந்த இராஜாக்களை யெல்லாம் அவாளவாள் நகரத்திற்கு அனுப்பிவைத்து தாங்கள் யெல்லோரும் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

## சரித்திரசுருக்கம்

முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

# நாரதர் கலகம்.

## இரண்டாம்பாகம்

## சுந்தராங்கி சாபவிமோசந சரித்திரம்.

---

### விநாயகர் துதி.

பனிவரைதன்னில் வாழும்பழமறை முதிர்ந்தோரேற்றும்
நனிமதிச்சடையோன்ஞான வறைமகள் மகிழ்ந்தளித்தோன்
இனியதோர் பாரதத்தை எழுதிய புழைக்கறத்தோன்
தனிமலர்கமலபாதந் தலைக்கணியாக்குவோமே.

### சரஸ்வதி துதி.

வனசமலராதனத்தான்வெள்ளோதிமத்தின்மிசைவருகனத்தான்
வனசமலர் விலோசனத்தான் வனசமங்கைக்குலவியநன்ஞர்பத்
தான்றன், வனசமலருந்தியதில் வந்துலகமதைப் படைத்தான்
மனைட்டியாம்வெண், வனசமலராதனத்தா ளெனதிதயம் பூத்தா
ளை வணங்குவோமே.

### நாரணன் துதி.

ஆதியாய்மூலமாகி அருமறைப்பொருளுமாகி
சோதியாய்ச் சுடருமாகி தூயநல்லுலக மெல்லாம்
வாதிலாதுண்டயெந்தை மாயவா உந்தன் பாதம்
தீதிலாதென்னத் தோடென்சிரமிசை சூட்டினேனே.

### சிவபெருமான் துதி.

மதிதணைவனைந்தயீசன் மங்கை நல்லுமையாள் பாகன்
கதிதருமுத்திகாந்தன் கங்கைமீதவாக் கலந்தோன்
நிதிவளர்குபேரனோடு நேசனாய் நின்றமூர்த்தி
விதிமுதல் விண்ணோரேற்றும் விமலனேபோற்றிபோற்றி.

அவையடக்கம்.

மதியின்முன்மினியைப் போலும்வட்டில்முன் தீபம்போலும்
கதியின்முன் கால்வாய்போலும் நான்சொலுஞ்சரிதைதன்னை
விதிபல நூலாய்ந்தோர்கள் வெறுத்திடார் சிறியேன்சொல்லை
முதிர்ந்தவர் நூலேயென்று மொழிந்து சந்தோஷிப்பாரே.

இதுவுமது.

கெருடன்முன் மசகமீடாய்கிட்டியே பரந்தாற்போலுந்
திருமயில்முன்வான் கோழிதி ருநடம்புரிந்தாற் போலும்
அருமறை தெரிந்தோர்முன்னே அடியனுமுறைத்தேன் நானும்
பறிவுடனினிதாய் கொண்டு பாவலர் பொருப்பதாமே.

## சரித்திர ஆரம்பம்.

என்னாட்டிஞ் சிறந்த நன்னாடாகிய பொன்னாட்டினை அரசாண்டுவரும் அமரேசன் ஓர்நாள்தான் கொலுவமர்ந்து வீற்றிருங்கால் திரிலோக சஞ்சாரியாகிய நார்தமகாரிஷி அவ்விடம் வர அமரேசன் அவர் வருதைத் தெரிந்து எதிர்சென்று அவருக்குப் பிரதக்ஷன நமஸ்காரஞ் செய்து அவரை அழைத்துக் கொண்டு வந்துஆசனமளித்து அன்னவரைபார்த்துச் சொல்லுகிறான் ஏமுனிநாதா தாங்கள் இந்த ஆசனத்திலமர வேண்டுமென தேவராஜன்வேண்ட மகாரிஷியும் அப்படியே அமர அதையறிந்த மரேசன் நாரதமகாரிஷியின் திருவடியைவணங்கிகேழ்க்கின்றான் சுவாமி தாங்களோதிரிலோக சஞ்சாரியானபடியால் தாங்கள் யெந்தந்த இடத்திற்குச் சென்றீர்களோ ஆங்காங்கு நடந்த ஒவ்வோரதிசயங்களையுங் கேழ்க்க அதிகவிருப்பமுடையவனாயிருக்கின்றேன் ஸ்வாமியென்று வணங்கிக் கேழ்க்க அப்போது நாரதமகரிஷியானவர் சொல்லுகின்றார் ஏதேவராஜனே யானோ சத்தியலோகஞ் சென்றேன் அங்குள்ள ஒவ்வோர் அதிசயங்களையுங்கண்ணுற்றவனாய் மீண்டும் வைகுண்டஞ் சென்றேன் அங்குள்ள வேடிக்கைகளையும் பார்த்துக்கொண்டு கைலாயத்திற்குவந்து சாக்ஷாத்பரமசிவத்தைச் சேவித்து அகமகிழ்ந்தவனாய்த் திரும்பியும்பூலோகத்திற்குவந்தேன் அந்தபூலோகத்தில் க்ஷத்தியமரபில்ஜெனித்த அரசர்களுடைய பெருமையை யான் என்னென்றெடுத்துரைப்பேன் தேவராஜனே யென்று நாரதர் சொல்ல அதைக்கேட்ட அமரேஸன்மகரிஷியைப் பார்த்துச் சொல்லுகிறான் ஸ்வாமிஅவாளுடைய பெருமை யென்ன அதைத்தெரிவிக்க வேண்டுமென்றுவணங்கிக்கேழ்க்க நாரதமகாரிஷி சொல்லுகிறார் ஏ தேவராஜனேஅவா



ளுடைய பெருமையைச் சொல்லுகிறேன்கேளும்அந்த இராஜாக்கள் தன்னுயிர்போல் மன்னுயிரையும பாவித்து வருவதோடுங்கூட தானதர்மம் யாகம் யெக்கியம் யென்றுசொல்லக்கூடியசத்கருமங்களையும் யெல்லாமுடித்து இராஜஜஸம்-தாமதம்-சாத்மீகமாகிய முக்குணங்களிலும்எதார்த்தமாகியசாத்மீகத்தன்மையை அடைந்து தெய்வ ஆராதனையை இடைவிடாது செய்து வருவதோடுங்கூட ஓர்மயிலுக்கொருதண்ணீர்ப்பந்தலும்ஐந்துமயிலுக்கோர் அன்னசத்திரமும் வைத்து பரிபாலித்து வருகிறார்கள் மேலும் அப்பூலோகத்திற்கு இந்தபொன்னுலகங்கூட இணையாகமாட்டாது யென்று நாரதமகரிஷி சொல்லஅதைக்கேட்டதேவராஜன் பூலோகத்தில் மானிடஜெனனத்திலவதரித்த அரஸர்கள் இவ்வளவு சத்தியசந்தானராய் இருக்கின்றார்களாயென்றுமகிழப் பின்பு நாரதர் தேவேந்திரனுக்கு மங்களாஸாஸனஞ்செய்துஆசிர்வதித்து தமதிருப்பிடஞ் சென்றவுடன் அச்சபையிலுள்ள காங்தர்வனாகிய அதிகுணனென்பவன இந்தசங்கதிகளையெல்லாங்கேட்டுக்கொண்டிருந்தபடியால் தானுந்தன் மனவியை அழைத்துக்

கொண்டுபூலோகத்தைப் பார்க்கவேண்டுமென்கிறவெண்ணங்கொண்டவனாய் தனது மனையாளாகிய சுந்தராங்கியிடஞ்சென்று அடிப்பெண்ணே சுந்தராங்கி பூலோகத்திலிருக்கப்பட்ட அரசர்களெலாம் மகாசத்தியசந்தனாயிருப்பதோடுங்கூட அந்தபூலோகத்திற்கு இந்த பொன்னுலகங்கூட இணையாகமாட்டாதா மென்று நாரதர் நமதரசனாகியதேவேந்திரனிடத்தில் சொன்னாராகையால் நாமிருவருஞ்சென்று பூலோகத்தைப் பார்த்து திரும்பியுமிவ்விடம் வரலாம்வா மென்றழைக்க அவளுமகா சந்தோஷப்பட்டவளாய் பூலோகத்திற்குத் தாங்களிருவரும் புறப்பட்டு வருகிறார்கள் அப்படி புரப்பட்டுவந்து அவ்விடங்களில் நடக்கும் ஒவ்வோர் அதிசயங்களுங்கண்ணுற்றவர்களாய் ரொம்பவும் சந்தோஷத்தையடைந்து தங்களுடைய நகரத்தைநாடிச்செல்லுங்கால் அவ்விடத்தில் மகரிஷிகள்தவஞ் செய்யக்கூடிய தபோவனமானது இவ்விருவருடைய நேத்திரத்திற்குப் புலப்பட்டது அவ்வனத்தைக்கண்டு அதிலுள்ள வேடிக்கைகளையும் அந்த தபோநிதிகளுடைய சேவையுஞ்செய்யவேண்டுமென்று யெண்ணங்கொண்டவர்களாய் அவ்வனத்திற்குச்சென்றார்கள் அப்படிச்சென்றபோது அவ்வனத்தில் மாதவமகரிஷி யென்றொருமுனிநாதர் தவம் பண்ணிக்கொண்டிருக்க இவர்களிருவரும் அவர்சமீபம் செல்லுங்கால் அன்னவர்தவமானதுகலைந்து தனதுசிஷ்யவர்க்கத்தாருடன் தவத்தினுடைய பெருமையைப்பற்றி சம்பாஷணை செய்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் காந்திருவர்களாகிய இவர்களிருவரும் அம்முனி நாதருடைய அகோரரூபத்தைப்பார்த்து அடடா இப்படியும்பூலோகத்தில் மானிடராய்ஜெனித்துஇவ்விதகோரரூபத்தோடுங்கூட உயிர்பெற்றிருப்பார்களா யென்று கலீரென நகைத்துச்சிறித்தார்கள்

அப்போது மாதவமகரிஷியானவர் இவர்கள்நகைத்தசப்தத்தைக்காதில் கேட்டவராய் இந்தகாந்தர்வர்கள் திடீரென நகைக்கவேண்டிய காரணம் யாதோவெனத் தமதுகியான திருஸ்டியாலுணர்ந்து இக்காந்தர்வர்கள்நமது ரூபத்தைப்பார்த்தல்லவா நகைத்தார்களென் றுணர்ந்தவராய் மகாகோபங்கொண்டு ஏ காந்தர்வர்களாகிய அதிகுணா ஏ சுந்தராங்கி நீங்கள் யேதோ ரூபலாவண்யத்தில் சிரந்திருக்கின்றோ மென்கிறகெர்வத்தினாலல்லவோ யென்னைப்பார்த்து நகைத்தீர்கள் பிடிசாபம் யென்று சொன்ன மாத்திரத்தில் இவ்விருவரும் நடுநடுங்கினவர்களாய் ஏ சுவாமிகாள் ஏமுனிநாதா ஏதபோநிதி அடிமைகள் அறியாமற் செய்த

அபசாரத்தைப் பொருத்து அங்கிகரிக்க வேண்டுமென்று வணங்
கியும் கோபந்தனியாதவராய் ஏ அதிகுணா நீபப்ரதேசத்தில் தாரி
த்திரியமே குடியாக்க் கொண்ட ஓர் நவீனனுடைய உதிரத்தில்
குஸ்டரோகியாக ஜெனிக்கக் கடவையென்று சாபத்தைக்கொடு
த்ததோடுங்கூட அவனது மனைவியாளையும் பார்த்துச் சொல்லுகி
றார் ஓசுந்தராங்கி நீயுங் காஸ்மீரதேசத்தைப் பரிபாலனஞ்செய்யு
ங்காபோஜ மகாராஜனுடைய உதிரத்தில் ஜெனிக்கக் கடவை
யென்று சாபத்தைக்கொடுக்கவே இவர்களிருவரும்பயந்து அ
வருடையதிருவடியில் விழுந்துநமஸ்க்கரித்துச்சொல்லுகிறார்கள்
ஏமுனிநாதா யெங்களுக்கு விமோச்சனம் யெந்தகாலம் யென்று
இரைஞ்சிஎற்ற அப்போது மாதவமகருஷியானவர் கோபந் தனி
ந்து ஒருவாறு யெடுத்துரைப்பார் அதாவதுஏ அதிகுணா நீபூலோ
கத்தில் குஷ்டரோகியாக ஜெனித்து இளமையிலேயே தாய் தந்
தையர்களை யிழந்து பப்ரதேசத்திற்கருகாமையிலுள்ள ஓர் வனத்
தில் வேடர்களால் உபசரிக்கப்பட்டு நீ மகாகஷ்டத்தைத் அனுப
வித்துக் கொடிருக்குஞ் சமயத்தில் உனது மனையாளாகிய சுந்
தராங்கி காஸ்மீரநகரத்தைப் பரிபாலனஞ் செய்யும் காம்போஜம
காராஜனுடைய உதிரத்தில் ஜெனித்து பப்ரதேசத் தாசனாகிய
சிதாநந்த மகாராஜனுக்கு இனையமனையாளாகி ஒரு காலத்தில்
சிதாநந்தனும் இப்பெண்ணுமாய் நீவசிக்குங்காட்டிற்கு வருவார்
கள் அப்போது அந்தப்பெண் உன்னைககண்டு உன்பேரில் மைய
லாகி இஸ்டபோக காமியார்த்தங்களையெல்லா முனக்கு நடத்து
வாள் அதுவேகாரணமாக அவளது கணவனாகியசிதாநந்தன் உங்
களிருவரையுங் கண்டுபிடித்து ஐம்பத்தைந்து தேசத்தரசர்களுஞ்
சூழ்ந்த இராஜசபையில் உங்களிருவரையும் சிரச்சேதஞ்செய்வா
ன் அப்போது நீங்களிருவரும் இந்தசரீரத்தைப்பெற்று உங்கள்
நன்னுடாகிய பொன்னுலகமடைவீர்களென்றுமாதவமகரிஷிசொ
ல்ல அப்போது இவர்களிருவரும் அந்தசாபத்தை பெற்றுக்கொ
ண்டவர்களாய்ச் சொல்லுகிறார்கள் நம்முடைய வினையானது இப்
படியும் யேற்பட்டதாவென்று வியாகூலப்பட்டுக்கொண்டு யார்
யார் யெந்தந்த விடத்தில் ஜெனிக்கவேண்டுமோ அந்த இடங்க
ளில் ஜெனித்தார்கள் அப்படி ஜெனித்தவுடன் இந்த அதிகுணன்
மேற்சொல்லிய நவீனனுடைய உதிரத்தில் குஷ்டரோகியா ஜெ
னித்து இவனுக்குஐந்துவயதாவதற்கு முன்பதாகவே தனது தாய்
தந்தையர்களை இழந்துவிட்டவனாகித் தனதுகுட்சி உபாதி தீரு

வதற்கு யாதொரு வகையுமில்லாமல் மகா கஸ்ட்டப்பட்டவனாய் அந்த பப்ரதேசத்தில் ஒவ்வொருவீடுகள்தோறும்போய்ப்பிச்சை கேழ்க்க ஆரம்பித்தான் இவனைக்கண்ட அந்த ராஜயத்தி லுள்ள எல்லோரும் இவனது கோரரூபத்தைக்கண்டு சமீபத்தில் வந்து அன்னமளிக்க அசிங்கப்பட்டவர்களாகி அன்னமில்லை யென்றே சொல்லிவிட்டார்கள் அப்போது இந்தக் குஷ்டரோகியானவன் பசியால்வருந்தி ஆசுஸ்வரா அடியேனை இவ்வளவுஇளமைவயதில் மாதாக்களை இழந்தும் பசியால்வருந்திக் கதரும்படியாய் விட்டனையே ஏ பரமபதி ஏ பார்வதிசமேதா ஏ சந்த்ரமவுலி யென்று கதறிக்கொண்டுபோகுந்தருவாயில் அவ்வூருக்கருகாமையிலுள்ள வனவேடர்கள் கடவுளருளால் இவனது பரிதாபத்தைப்பார்த்து சகியாதவர்களாய் தாங்களிருக்கு மிடத்திற்கு அழைத்துக் கொண்டு போயிருக்கச்செய்து தாங்கள் புசிக்கும்விலங்குபரவை முதலாகியமாசாதிவர்க்கத்தால்அவனது பசியையாற்றி அவடத்திலேயே ஓர் குடிசையில் வைத்துபாது காத்துவந்தார்கள்.

ஃது யிப்படி யிருக்க மேற்சொல்லிய சுந்தராங்கி யானவள் காஸ்மீரதேஸத்தையாளும் காம்போஜ மகாராஜனுடையபுத்திரியாய் ஜெனித்து சந்திரவடிவாளென்கிர பெயர்வகித்து நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமாகவளர்ந்து ஐந்தாம்வயதில்







கலைகளையுமுணர்ந்து பிரகுமங்கைப் பருவமடைந்தாள் இவளது வடிவத்தையும் பூரணசந்திரன் போன்றமுகார விந்தத்தையும் தனதுபிதாவாகிய காம்போஜமகாராஜன் கண்டுஆனந்தித்துஇச் சுந்திரமுள்ள பெண்ணுக்குச் சரியான மணவாளன் எப்போது கிடைப்பானோ வென்று ஏக்கங்கொண்டிருந்த இம்மன்னனுக்கு நன்னிசையோடுகூட ஓர்மன்னவன் நிருபம்வரைந்தான் அவனுரெனிலோ மின்னிம்புகழும் பப்ரதேசத்தரசனாகிய சிதாங்கதன் மெத்தவருந்தி தனக்கிஷ்டமானவர் ஓர்பெண்ணைவிவாகஞ்செய்துக்கொள்ளவேண்டுமென்கிற யெண்ணங்கொண்டவனாய்க் காம்போஜமகாராஜனிடஞ் சென்று அம்மன்னனைக்கண்டு நான்தங்களுக்கு நிருபம்வரைந்த பிரகாரம் தாங்கள்குமாரத்தியை யெனக்குப் பாணிக்கிரஹணஞ் செய்துகொடுக்கவேண்டுமென்று கேழ்க்க காம்போஜமகாராஜன் சம்மதித்தவனாய் அப்படியே பப்ரதேசத்தரசனுக்கு கலியாணஞ்செய்து சகலவரிசைகளுங் கொடுத்து தாம்பதி சமேதராய் வாழ்ந்திருங்களென்று ஆசீர்வதித்து பப்ரதேசத்திற்கனுப்பி வைத்தான் அப்படியே இவர்கள் சென்றுக தன்னிளயமனையாளுடன் தான் பப்ரதேசத்தையாண்டுக்கொண்டு சுகமாகவாழ்ந்து வருங்காலத்தில் ஓர் நாள்தான் கொலுவமர்ந்து இருக்குஞ் சமயத்தில்.

அவ்வூரினுள்ள குடிகள் தாங்களிட்ட பயிர்களை யெல்லாம் காட்டுமிருகங்கள்வந்து அழித்துச்சென்றுவிட்டதைக்கண்டுசகியாதவர்களாய் வந்து அரசனிடத்தில் முறையிட்டார்கள் அம்முறையைக்கேட்ட அரசன் அக்குடிகளைப் பார்த்துச் சொல்லுகிறான் ஏ குடிகளே நீங்கள்யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம் நீங்கள் கட்டவேண்டிய பகுதிகளை மூன்றுவருஷத்திற்கு கட்டவேண்டியதில்லை நீங்களெல்லோரும் உங்கள்கிரகங்களைஅடைவீர்கள் யான்காட்டிற்கு சென்று அம்மிருகசார்த்துலங்களை யெல்லாங்கொன்று அதிசீக்கிரத்தில் வருகின்றேனென அரசன் தெரிவிக்க அக்குடிகளெல்லாந் தங்களிருப்பிடஞ்சென்றுவிட்டார்கள் பின்பு அரசன் தான் வேட்டைக்குச் செல்வதாய்உத்தேசித்துத் தன் அமைச்சனை அழைத்து ஏ மந்திரியே நாமின்றயத்தினங் காட்டிற்குசென்று வேட்டையாடவேண்டிய திருப்பதால் நீரதி சீக்கிரத்தில் நமது சேனைகளை சித்தப்படுத்திமுன்பதாகச்செல்லுங்கள் இதோநான் அந்தப்புரஞ்சென்று உங்கள் பின்பற்றி வருகி

றேனென்றுசொல்லிவிட்டு தனது இளைய மனைவியினுடையகிர
கஞ்சென்று அவளைக்கண்டு ஏ பெண்பாவாய்நமதுநாட்டிலுள்ள
பயிர்களையெல்லாம் காட்டுமிருகங்கள்வந்து அழித்துவிட்டதாய்
குடிகளெல்லாம் வந்து யென்னிடம முறையிட்டபடியால் நான்
காட்டிற்குச்சென்று அம்மிருகங்களையெல்லாம் வாட்டித் தேட்
டையுடன் இன்னுட்டையடையும் வரையில் நீஅப்பாட்டையை
யெதிர்நோக்கி அதிஜாக்கிரதையாய்இருக்கவேண்டுமென்று சொ
ல்ல அவ்வார்த்தையைக்கேட்ட அம்மாது ஏ நாதாயானுநெடு
நாளாக அவ்வனங்களைபார்க்க அபேட்சை யுடைவைளாயிருக்கி
றேனெனத் தெரிவிக்க மன்னவனதற்கிசைந்து அவளையுந் தன்
கூட அழைத்துக்கொண்டு வேட்டைக்குச்சென்று அக்காட்டில்
தனது மனையாளுக்கு ஓர்கூடாரமானது ஏற்படுத்திஅக்கூடாரத்
திலவளை இருக்கச்செய்து நாங்கள் வேட்டையாடி வருமளவும்நீ
இந்தக் கூடாரத்திலேயே இருப்பாயென்று திட்டஞ்செய்துஅர
சனுந் தனதுமந்திரியும் மற்றுள்ளசேனைகளோடுங் கூடச்சென்று



அக்காட்டிலுள்ள மிருகங்களை யெல்லாம் வாட்ட அதிலொருமா
னனது தவரிஓட அரசனைப் பின்பற்றி இவர்களெல்லோரும் அம்
மானைத்துரத்திக்கொண்டே நெடுந்தூரஞ்செல்ல அங்குஇவர்களு
க்கு வழிதெரியாமல் அக்கொடிய கானகத்திலலைந்து சூரியவெப்
பத்தால்த் தாகவிடாயதிகரிக்க தாகந்தாள முடியாதவர்களாய்க்
கடைசியாகக் கடவுளருளால் ஓர் மகரிஷியினுடைய ஆசிரமம்
இவர்கள் நேத்திரத்திற்குத் தோன்றப்பட்டது அங்கு இவர்கள்
சென்று அதற்கருகாமையிலுள்ள தடாகத்தைக்கண்டு தாங்கள்
தங்கள் தாகவிடாயைத்தணித்துக்கொண்டு சற்றுநேரமவ்விடத்
திற்சயனித்துக்கொண்டிருந்தார்கள் இதுஇப்படியிருக்கஅரசனு

டைய மனைவியாள் தன்னைத் தனியாகவிட்டுப் போனவ ரின்னம் வரவில்லையேயென்று வியாகூலப்பட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில் முன்னால் கூறிய குஷ்டரோகி அந்தக்கூடாரத்தி னருகில்அகஸ்மாத்தாய் வந்து சேர்ந்தனன் அப்போது மாதவ மகரிஷியினுடையசாபமும் வந்து ஒத்துக்கொண்டதினால் அப்போதுஅரசனுடைய மனையாள் அந்த குஷ்டரோகியைக் கண்டமாத்திரத்தில் அவன்மீது மகாமோகங் கொண்டவளாய் அவனைவலுவிலழைத்து அவனுடன்கூடிச் சுகித்து சந்தோஷத்தை யடைந்துச் சொல்லுகிறாள் ஏ பிராணபதி நாமிப்படியே சதாகாலமும் சுகபோகங்களை அடையவேண்டிய திருப்பதால் நமதுபப்ரநாட்டிற் கருகாமையில் ஓர் பாழும்மண்டபமொன்றிருக்கிறது நீரவிடம் வந்து அதிலிருந்தால்நான் பிரதிதினமும் இரவில்உம்மிடம்வந்து நல்லசுகத்தை யடைந்துவிட்டுமீண்டும்மென்னகருக்குசெல்லுவேனென்று அம்மங்கைசொல்ல அதைக்கேட்ட குஷ்டரோகிஅதிக சந்தோஷமுடையவனாய் ஏ பெண்ணரசி நீசொன்னயோசனையே சரியானயோசனை ஆகையால் அவ்விடம்யான்முன்னுதாகவேசென்று அவிடமிருக்கின்றேன் நீஇராத்திரிக்குசீக்கிரம்அவிடம்வந்து சேரவேண்டியதுயென்று சொல்லிவிட்டு குஷ்டரோகியானமுடவன் அம்மண்டபந்தேடி அங்குவந்தமர்ந்திருந்தான்.

பின்பு மகரிஷியின் ஆசிர்மத்தில் நித்திரை செய்துக்கொண்டிருந்தவர்களெல்லாம் நித்திரைத் தெளிந்து தங்கள்ராஜ்ஜியத்திற்குப்போகும்படியான பாட்டையைத்தேடி வரும் வழியில் அரசன் தன்மனையாளிருக்கின்ற கூடாரத்தைக்கண்டு அவளையுமழைத்துக்கொண்டு தன்னகர்வந்துசேர்ந்தான் அப்போது அரசனுடைய மூத்தமனையாள் தன்கணவன்வரவையெதிர்பார்த்துக்கொண்டிருந்து அரசன் வந்தவுடன் வேட்டையாடிவந்தகளை தீரும்படியாய் வென்னீர் முதலானதுகளால் ஸ்னானபானஞ் செய்துவைத்து பதினெண்வர்க்கத்துட னுபசரித்து போஜனமளிக்க அரசன் ரொம்பவும் மகிழ்ச்சியுடன் போஜனமருந்தித் தாம்பூலந் தரித்துக்கொண்டு மூத்தமனையாளுடன் தான் வேட்டைக்குப் போனதுமுதல் அரன்மனை சேர்ந்தவரையில் சவிஸ்த்தாரமாய்ச் சொல்லி சிலநேரம் பேசிக்கொண்டிருந்து பின்புபள்ளியரைபோய் சேர்ந்தான் இது யிப்படியிருக்க,

இவ்வரசனுடைய இளையமனையாள் தான்காட்டிற்கண்டசுகத்தையடைந்த அந்த குஷ்டரோகியின் பேரிலேயே அதிககாதல் கொண்டவளாய் இராத்திரி நடுச்சாமத்தில் அவனுக்கு வேண்டுமான பண்டுபலகாரங்களை யெடுத்துக்கொண்டுகபாடத்தைத்திறந்து அவ்வழியாகவே சென்று குஷ்டரோகியிருக்கும்அம்மண்டபத்தைக்கண்டு அதற்குட்சென்று குஷ்டரோகியைப் பார்த்து அதிக மகிழ்ச்சியடைந்தவளாய்த் தான் கொண்டுவந்த பலகாரவர்க்கங்களை அவனுக்கு களித்துப்பின்பு இவள் தாம்பூலம்மடித்துக்கொடுக்க அவனும் தாம்பூலமருந்தி அவளுடன் மதன லீலை புரிந்து இவர்களிருவரும் சுகத்தை அடைந்திருக்கின்ற சமயத்தில் அரசனுடைய மனவி குஷ்டரோகியைப் பார்த்துச் சொல்லுகிறாள் ஏ பிராணகாந்தா யானோ இவ்விடம் வந்து நெடுநேரமாயிற்று யெனதுகணவன் விழித்துக்கொள்வதற்கு முன்பதாகநானவ்விடம் போகவேண்டுமென்று சொல்லி அவனுத்திரவுபெற்றுக் கொண்டு பின்பு அரண்மனைசேர்ந்து அரசனுடைய சமீபத்தில் வந்துபடுத்து நித்திரை செய்துக்கொண்டாள் இப்படியே வழக்கப் பிரகாரம் சதாகாலமும் நடத்திக்கொண்டுவருங் காலையில் ஒர்நாள் தனது அரசனாகிய சிதாநந்தன் பள்ளியறையில் அம்சதூளிகாமஞ்சத்தில் தானும் அமர்ந்து தன் இளையாளையும் அமரச்செய்து தாங்களிருவரும் கேளீவிலாசமாக யிருக்கின்றசமயத்தில் அரசன் உல்லாசமாகவே தான் மல்லிகைச்செண்டை எடுத்து பன்னீரில் நினைத்துஅவளது ஸ்தன்னியத்திலடித்தான்அப்போதே என்ன நினைத்தாளென்றால் இவனுடன் நாமிப்படி சரசமாடிக்கொண்டிருந்தால் குஷ்டரோகியிடம் நாம் எப்போது செல்லுகிறது காலஹரணமாய் விடுகிறதே ஆகையா லிவ்வரசனை எப்படியாவது ஏமாற்றி நித்திரை செய்யச்செய்து நாம்நமதுஆசைநாயகனாகிய குஷ்டரோகியிடஞ் செல்வதே சரியென்றுதீர்மானித்தவளாய் அந்த மல்லிகைச்செண்டாலடித்த அடிஇவளதுஸ்தன்னியத்திற்பட்டமாத்திரத்தில் இவள் இடிவிழுந்து மயங்கிவிழுபவள்போல பூமியின்கண்ணே மூற்சித்துவிழுந்துவிட்டாள் இதைக்கண்ட அரசன் தியங்கிஆஆ இதுவென்ன ஆச்சரியகரமாயிருக்கின்றது கேவலம் மிருதுவான இம்மல்லிகைச் செண்டாலெறியஅது இவளதுஸ்த்தன்னியத்தில் பட்டமாத்திரத்தில் இவளயர்ந்துபூமியில்விழுந்துவிட்டாளே இவள் மகாநீலியாயிருப்பாள்போலுந்தோன்றுகின்றதேயென்று மகாசிந்தாக்கிராந்தனாய்இவளது

நீவித்தனத்தைநாமரிய வேண்டுமென்று மனதில் நினைத்து களப கஸ்தூரிகளால் இவளது சோகத்தை மாத்தித்தனது சமீபத்தில் படுக்கவைத்துக் கொண்டு இவள் இன்னம் என்ன செய்கின்ருள் பார்ப்போமென்று நித்திரை செய்பவனைப்போல இவளுக்குச் சாடைகாட்டி நித்திரை செய்யாமலே கண்ணைமூடிக்கொண்டிருந்தான்.

இப்படியிருக்க அவள்சற்றுநேரந்தாமதித்திருந்து தனது கணவன்நித்திரை செய்கிறானென்றெண்ணி வழக்கப் பிரகாரம் குஷ்ட்டரோகிக்கி வேண்டுமான பண்டு பலகாரங்களை ஓர் தட்டிலெடுத்து வைத்துக்கொண்டு கபாடத்தைதிரந்து வெளியே போகுரபோது அதிக இருளாயிருந்தது அப்போது இவளுக்கும்பாதை தெரியாமல்அவ்வழியில் உதிர்ந்து கிடக்கின்ற சருகுகளைச் சேர்ந்துத் தீயிட்டு அதிலுண்டாகும் வெளிச்சத்தால் அவ்வழியைக்கண்டு பிடித்து குஷ்ட்டரோகிஇருக்குமிடம் போய்ச்சேர்ந்தாள் அப்போது அவள் கணவன் இவள்பேதோஓர் தட்டைக் கரத்திலேந்தி கபாடத்தைத்திரந்து கொண்டு வெளியே செல்லுகின்ருள் இவள்வெளியே செல்லுவதற்குக் காரணம்யாதோதெரியவில்லையே எப்படியாவது இதைப்பரிசோதிக்க வேண்டுமென்று இவளுக்குத் தெரியாதபடி தான் பின்றுடர்ந்துவந்து இவ்விடத்தில் நடக்கும் நடவடிக்கைகளை நேரிடப்பார்த்துக்கொண்டேயின் பற்றிவக்தான் பிரகு இவள் குஷ்ட்டரோகி இருக்குமிடஞ் சென்றவுடன் அந்தகுஷ்ட்டரோகி இவளைக்கண்டு மகாகோபங் கொண்டு அடிசண்டாளி நான்பசியாயிருப்பேனென்றுனக்கு தெரிந்தும் இன்னேரவரையில் வராதிருந்தாயல்லவாவென்றுசினங்கொண்டுதனது கரத்திலிருந்த கோலால் அவளை அடித்தான்

அவளந்த அடியைப்பட்டுக்கொண்டு இரு நேத்திரங்களிலும் நீர் சொரியதான் கொண்டுவந்த உணவுகளை யெல்லாம்அவனுக்களித்துச் சொல்லுகிராள் ஏ பிராணபதி இன்றயத்தினம்யெனது கணவன் நெடுநேரவரையில் யென்னேடு சரஸமாய் விளையாடிக் கொண்டிருந்த மையால் நாஞெருஉபாயத்தினல் அவரையே மாத்தி அன்னவரைாநித்திரை செய்யும் படியாகச் செய்துதங்களிடம் வந்துசேர யினேரமாய்விட்டது ஆகையாலின்று தாங்கள் யென்மேலுற்ற கோபத்தைத்தணித்து யென்னேடு கூடிச்சுகிக்க

வேண்டுமென்று வணங்கிக் கேழ்க்கவே குஷ்ட்டரோகி போகந் தணிந்தவனாய் அவளது இஸ்ட்டம்போல் அவளுடன் கூடிச்சுகித்துச் சொல்லுகிறான் ஏ நங்காய்த்தங்கநிறம்போன்றஉன்னைத் தைப்பங்கப்படுத்துவதற்காக உயர்ந்த புஸ்ப்பாணத்தை உன்மேல்பிரயோகம்பண்ணுகின்ற அங்கஜவேள்நாணும்படிசங்கையால் உன் கொங்கையைத் தொட்டு உனக்கிங்கிதத்தைக் கொடுக்க நாளையிலிருந்து நீ அதிசீக்கிரத்தில் வந்துவிட்டுப் போகவேண்டுமென்றுசொல்ல அதைக்கேட்ட இம்மங்கையானவள் அப்படியே நல்லதாகட்டுமென்றுசொல்லித் திரும்பிவருகிறாள் இவளிப்படி திரும்பிவருகிறபோது தனதுகணவன் பின்தொடர்ந்து வந்து இந்தச்சங்கதிகளை யெல்லாம் நேரிடப்பார்த்தபடியால் மகா கோபங்கொண்டவனாயிருந்தாலும் அவ்வித கோபத்தை வெளிவிடாமல் இது யேதோ ஓர் காரணார்த்மா யிருக்கவேண்டும் அதை நாம் நிதானமாய் யோசித்து இவளுக்குத் தகுந்த தெண்டனையைவிதிக்கவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டவனாய்த்தான் அவளுக்கு முன்னுதாகவே வந்து யாதொன்றுந்தெரியாதவனைப்போலவேபள்ளியறையில்வந்துபடுத்து நித்திரைசெய்துக்கொண்டான் பின்பு இவளும் அரசன் சமீபத்தில் வந்து சயனித்துக் கொண்டாள் பின்பு அரசன் அதிகாலேயி லெழுந்துக்கொண்டு உண்டு தாம்பூலந்தரித்து ஆடையாபரண அலங்கிர்தனாகிப் புறப்பட்டு தனது சிம்மாசனத்தில் வீற்றிருந்தான் அப்படி வீற்றிருந்த காலையில் அரசனுடைய கொலுவில் யெப்போதும் வழக்கமாய் வந்து சங்கீதக்கியானஞ் செய்யக்கூடிய மோகனுளென்னுந்தாசியானவள் தானெப்போதும் போல் வழக்கமாய்ப் பாடுவதைப்போல்ப்பாட ஆரம்பித்தாள் அதைக்கேட்ட அரசன் அத்தாசியாகிய மோகனுளைப்பார்த்துச் சொல்லுகிறான் ஏ பெண்பாவாய் உனது பாடலைநிறுத்தென்று சொல்லவே அப்படிச்சொன்ன அரஸன் வார்த்தையைக்கேட்ட அத்தாசியானவள் தான்பாடுவதை நிருத்திவிட்டாள் அப்போது அரஸன் அச்சபையார்களை பார்த்துச் சொல்லுகிறான் சபையோர்களே இங்குள்ள யாருக்காவது அம்பலத்ததிசயம் பாடத்தெரியுமா வென்று அரஸன் கேழ்க்க அச்சபையிலுள்ள யெல்லோரும் பேசாமலிருந்துவிட்டார்கள்.

அப்போது மோகனுளென்னுந் தாசியானவள் எழுந்துஅரஸனைப்பார்த்துச்சொல்லுகிறாள் ஏ ராஜசேகராயானந்தஅம்பலத்ததிசயம்பாடுகிறேனென்று சொல்ல அரஸனதைக்கேட்டு ஏ

மோகனை யெத்தனைநாளிற் பாடுவாயென்று கேழ்க்க தாசியானவள் சொல்லுகிறாள் நான் இன்னுமொருவாரத்திற்குள் வந்துபாடுகிறேன் யென்று சொல்ல அரசன் சொல்லுகிறான் அப்படி நீ ஒரு வாரத்திற்குள் வந்து பாடாவிட்டால் உன்னைக் கட்டாயம் சிரச்சேதஞ்செய்து விடுவேனென்று சொல்ல அதற்கிணங்கினவளாய்த்தனதுகிரகம் வந்துசேர்ந்தாள் வந்துசேர்ந்து ஒருநாளாச்சு இரண்டு நாளாச்சு இப்படி ஏழுநாளாகியும் தனக்கு அம்பலத்ததிசயம் இன்னதுதானென்று கண்டுபிடித்துப்பாடத்தெரியாதவளாய் மகாதுக்கப்பட்டுக்கொண்டு ஐயோ நாமும் யெல்லோரையும்போல் சும்மாயிராமல் பாடத்தெரியுமென்று அரசனிடத்தில் ஒப்புக்கொண்டோம் நாம் நாளையதினம்போய் பாடாவிட்டால் நமதுசிரசு போய்விடுமேயென்று வியாகூலப்பட்டுக்கொண்டிருக்கின்ற சமயத்தில் (இது) இப்படியிருக்க கலிங்கதேசத்தைப்பரிபாலனஞ் செய்துவரும்யாதவ மகாராஜன்தான் கொலுவமர்ந்து சிம்மாஸனாதிபதியால இருக்கின்றசமயத்தில் தனக்கு நெடுங்காலமாய்ப் புத்திரனில்லாததைப் பற்றிமகாவியாகூலப்பட்டுத்தனது மந்திரியினிடம் முறையிட்டுச் சொல்லுகின்றான் ஏ மந்திரியே யான்முன் ஜென்மத்தில் யென்னகர்மத்தைச் செய்தேனோ இந்த ஜென்மத்தில்யெனக்குப்புத்திரனில்லாமல் போய்விட்டதுமேலும்புத்திரனில்லாதவர்களுக்கு ஈஸ்பரனுடையதிருவடிகிடைப்பது மகா அரிதென்றும் இதிகாசங்களில் முறையிட்டிருப்ப தோடுங்கூட குழந்தைகளில்லாத கிரகம் கிரகமல்ல அது நரகமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது அதுவுந்தவிர நமக்குப்பின்னிட்டு இந்த ராச்சியத்தைப் பரிபாலித்தும் வருவதற்கு சந்ததி இல்லாமற் போய்விட்டதே நானென்ன செய்வேனென்று மந்திரியினிடமுரைக்க அம்மந்திரியானவன் தனது அரசனைப்பார்த்துச்சொல்லுகிறான் ஏ மகாராஜனே தாங்களிப்படி வியாகூலப்பட வேண்டியதில்லை யானொரு உபாயஞ் சொல்லுகிறேன் அதின் பிரகாரந் தாங்கள்நடந்தால் புத்திரசந்தான முண்டாகுமென்று அமைச்சன்சொல்லவே அதைக்கேட்ட அரசன் மகாசந்தோஷப்பட்டுத் தனது மந்திரியைப்பார்த்துச் சொல்லுகிறான்யெனது உயிர்போன்ற அமைச்சனே அதுயென்ன உபாயந் தெரிவிப்பா யென்று அரசன் கேழ்க்க அம்மந்திரியானவன்சொல்லுகின்றான் ஏ பிரபு தாங்கள் மரவுரிதரித்துக்கொண்டு காட்டிற்குச்சென்று பஞ்சாக்கினி மத்தியில் நின்று சாக்ஷாத் சந்ரசேகரனைக்குறித்துதவஞ்

செய்வீர்களேயானால் அக் கைலயங்கிரிவாஸன் தாங்கள் செய்யுந் தவத்திற் கிரங்கி ரிஷபவாகனரூடராய் வந்து தாங்களுக்கு தெரிசனங் கொடுப்பதுமன்னியில் தாங்கள் கோரியபடி புத்திர பாக்கியமுண்டாகும்படி வரமருளிச் செல்வாரென்றுமந்திரிசொல்லவே அந்தஅரசன் இந்தவார்த்தையைக்கேட்டவுடன் மகாசந்தோஷித்தனாய்த் தனது இராச்சியத்தை அம் மந்திரிவசமொப்பிவைத்துவிட்டுத் தான் மாவுரி தரித்துக்கொண்டு காட்டிற்குச் சென்றுதவத்திற்குரிய இடமெதுவோ அந்தஇடத்தைப்பார்த்து அவ்விடத்தில் பஞ்சாக்கினியேற்படுத்தி அதின்மத்தியில் நின்று தவஞ்செய்ய ஆரம்பித்தான் அப்படிச்சிலநாள் தவஞ்செய்துக்கொண்டுவர இவனது தவத்திற்கிரங்கிப் பரமசிவன் உமையவள்சகித





மாய் ரிடபவாகனரூடராகத்தானேபுறப்பட்டு யாதவமகாராஜன் தவஞ் செய்துக்கொண்டிருக்கும் இடத்திற்கு வந்து அரசனைக் கண்டு சொல்லுகிறார் ஓ யாதவமகாராஜனே நீ செய்ததவத்திற்கு மெச்சி யானிவ்விடம்வந்தேன் உனதிச்சையெதுவோ அதைக்கேளவ்வித இச்சையைப் பூர்த்திசெய்கின்றேனென்று சுவாமி சொல்லஅரசன் கண்விழித்துப்பார்த்து ரிடபவாகனரூடராகத் தானே வந்திருக்குங் கடவுளைத் தெரிசித்து அரசன் ஆனந்தப் பரவசமடைந்தவனாய் சுவாமிக்கி அஷ்டாங்கம் பஞ்சாங்கம் திரியாங்கங்களினால்நமஸ்கரித்துச் செய்யுந் தோத்திரம்.

## தேவாரம்.

திங்கள்முன் சடையாய்போற்றித் திரிபுர மெரித்தாய்போற்றி
மங்கையோர் பாகாபோற்றி மான்மழு தரித்தாய்போற்றி
துங்கவெண் விடையாய்போற்றித் துலங்குமுக் கண்ணுபோற்றி
எங்கள்நா யகனேபோற்றி ஈசனே போற்றிபோற்றி. 1

ஆதியே அரனேபோற்றி அம்பிகை பாகாபோற்றி
வேதியன் மதலைதன்னை விருந்துண்ட நாதாபோற்றி
நீதியா முலைகையாள நீள்சுதன் வேண்டிவந்தேன்
பாதியா மதியைச்சூடும் பரமனே போற்றிபோற்றி. 2

காமனை யெரிந்தாய்போற்றிக் கரியுரி தரித்தாய்போற்றி
சோமனைத் திருக்கண்கொண்ட சுந்தர வடிவாபோற்றி
நேமமாய்ப் புதல்வன்வேண்டி நின்றனன் றவத்தில்யானும்
சேமமா யருள்தந்தாளுஞ் செஞ்சடை நாதாபோற்றி. 3

மூவர்க்கு முதலேபோற்றி முக்கணு போற்றிமுன்னாள்
காவலன் றனக்கிரங்கி கர்த்தனே குழவியானாய்
ஆவலாய் மகவுவேண்டி அருந்தவம் புரியலுற்றேன்
தேவனே சுதன்றந்தாளுஞ் சேவடிபோற்றிபோற்றி. 4

வ ச ன ம்.

என்று சுவாமியைத் துதிபண்ணி ஏ சங்கரா கெங்காதரா பார்வதி மனோகரா ஏ சந்திரச்சூடா ஏ சந்திரமவுலீ யென்று சுவாமியைவணங்கிச்சொல்லுகிறான் ஏ சுவாமி அடியேன்எதைக் கோறி தவஞ்செய்ய வந்ததென்றால் எனக்குப் பின்னிட்டெனது ராச்சியத்தைப் பரிபாலித்துவருவதற்குப் புத்திர னில்லாததால் தங்களுடைய திருவடியைப்பிரார்த்தித்து தவஞ்செய்யவந்தேன் ஆகையால் அவ்விதபுத்திராபேக்ஷையைப் பூர்த்திசெய்து அடியே னுடையசந்ததிவிளங்கும்படியாய் ஓர் சற்புத்திரனைப்பாலித்தரு ளவேண்டும் சுவாமியென்று அரசன் வணங்கிக்கேட்க அப்போது ஈஸ்வரன் மகாசந்தோஷமடைந்தவராய் அரசனைப்பார்த்துச்சொல்லுகிறார் ஓ யாதவமகாராஜனே உனது அபிப்பிராயம்போலவே நல்ல சற்புத்திரனாய் உண்டாகும்படி அனுக்கிரகப்பண்ணினோம் ஆகையால் நீ உன்னுடைய நகரம்போய்ச்சேருவாயென்று சொ

ல்லி சுவாமி அந்தரத்தியானமாய்விட்டார் பின்பு யாதவமகாரா ஜன் வரத்தைப் பெற்றுக்கொண்டு தன்னகரம்வந்து சேர்ந்துதா னும் தனது பட்டமகிஷியும் சந்தோஷ வார்த்தையாடித் தான் தவஞ் செய்ததும் ஈஸ்வரன் பிரசன்னமாக வந்து தனநிஷ்டம் போல் நல்ல சற்புத்திரனுய்உண்டாகும்படி வாமளித்தேகியதும் பேசிக்கொண்டுமகிழ்ச்சயாய் வாழ்ந்துவந்தார்கள் இப்படியிருக்க ஈஸ்வரன் வரப்பிரசாதத்தினுல் யாதவமகாராஜனுடன்மனைவியா கிய செண்பகவதி யென்பவள் அதுவேமாத சூலாயிருந்துபத்து மாதமுஞ்சென்று நல்ல சுபமுகூர்த்தத்தில் கோடிசூரியப்பிரகா சம்போன்ற ஓர் புத்திரனை ஈன்றுள் இதுசேதி அறிந்ததாதியான வள் ஓடோடியும் வந்து அரசனிடத்தில் தெரிவித்தாள்.

அவ்வார்த்தையைக்கேட்ட அரசன் மகாசந்தோஷப்பட்ட வனுய் அனேகங்கோடி பிராமணுளையும்யாசகாளையுந் தருவித்து அவாளவாளுக் குரியபடி கோதானம் பூதானம் சொர்னதானம் வஸ்திரதானமென்று சொல்லக்கூடிய தானங்களையெல்லாஞ் செ ய்து பிறகு தனதுமந்திரியைத் தருவித்து யெனதன்பிற்குரிய அமைச்சனே நமது புத்திரனுக்கு ஜாதகம் கணிக்கவேண்டிய திருப்பதால் நமது நாட்டிலுள்ள ஜோதிடர்களுக்குள் யார் கெ ட்டிக்காரர்களோ அவாளை அதிசீக்கிரத்தில் வருவிக்கவேண்டு மென்றுஅரசன் சொல்ல அவ்வார்த்தையைக்கேட்டமந்திரி அதி சீக்கிரத்தில் அரசனுடைய உத்திரவுபிறகாரம் ஜோதிடர்களை வரவழைத்தார்.

ஜோதிடர்கள் வந்தவுடன் அரசனவர்களைப்பார்த்துச் சொ ல்லுகிறுன் ஐயா ஜோதிடர்களே நீங்கள் எனது குழந்தை ஜெ னித்த வாரம் திதி நக்ஷத்திரம் இதுகளைப்பார்த்துசொல்லவேண் டுமென்று அரசன்சொல்லவேஜோதிடர்கள் அதற்குசம்மதித்து குழந்தை ஜெனித்த நாழிகையைக்கேட்டு அஷ்டகவர்க்குப்போ ட்டுபார்த்து அதில்அந்தஜாதகப்பலன்எப்படியிருக்கிறதென்றுல் இந்தஜாதகன் மகாபுஜபலபராக்ரமத்தில்சிறந்தவனுகவும்மகாதே ஜசுடையவனுகவும் வித்துவானுகவும் மகாராஜனுகவும் கொடை யாளியாகவுமிருப்பான் ஆனுல்இந்த ஜாதகனுக்குப்பதினுருவது வயதில் ஓர்ஸ்திரீனுடையகாரணத்தால் மரணமடைந்துமீண்டும் தனதுமந்திரியால் உயிர்பெற்று அன்னியதேசத்திற்குஅரசனுக இருப்பானென்று ஜோதிடர்சொல்ல இந்தச்சங்கதியைஅரசனிட

ந்தெரிவிக்கப்பயந்து பதினாறுவதுவயதில் மாரகம்யேற்பட்டிருக்கிற சங்கதி ஒன்றைமாத்திரம்மறைந்து மற்றவிசேஷங்களையெல்லாம் சவிஸ்தாரமாக அரசனிடத்தில் தெரிவித்தார்கள்.

அதைக்கேட்ட அரசன் மகாசந்தோஷப்பட்டவனாய் அந்த ஜோதிடர்களுக்கு வேண்டிய வெகுமதிகள் கொடுத்து அவர்களை அனுப்பிவைத்து பின்பு குழந்தைக்கு கேஸரியென்கின்றநாமகரணமிட்டு குழந்தையை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவந்தார்கள் இப்படிவளர்த்துவருகையில்குழந்தைக்கு ஐந்துவயதாயிற்று இனிநாம்சும்மாயிருக்கலாகாதுநமது புத்திரனுக்கு வித்யாரம்பம் செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டவனாய்த் தனது மந்திரியை அழைத்துச்சொல்லுகிறான் மந்திரியே நமது புத்திரனுக்கைந்துவயதாயிற்றுநீரதிசீக்கிரத்தில் நமது ராச்சியத்திலுள்ள உபாத்தியாயர்களில் கெட்டிக்காரர்கள் யாரோ அவர்களை உடனே தருவிக்கவேண்டுமென்று அரசன் சொல்ல அதைக்கேட்ட அமைச்ச னப்படியே ஆகட்டுமென்று உடனே உபாத்தியாயரைத் தருவித்தான் உபாத்தியாயர் அரசனுடைய சமுகம்வர அரசன் உபாத்தியாயரைக் கண்டவுடன் சொல்லுகின்றான் ஐயா உபாத்தியாயரே நீர் யெனது குமாரனுக்கும் யெனது மந்திரிகுமாரனுக்கும் தளகர்த்தன் குமாரன் தண்டத்தலைவன்குமாரன் இந் நான்குபிள்ளைகளுக்கும் வித்தையைக் கற்றுக்கொடுக்கவேண்டுமென்று சொல்ல உபாத்தியாயர் அப்படியே கற்றுக்கொடுக்கின்றேன் மகாராஜனேயென்று சொல்லி இந் நான்கு பிள்ளைகளுக்கும் வித்தையைக் கற்றுக்கொடுத்துக் கொண்டேவர இப்பிள்ளைகள் நான்கும் ஒன்றுக்கொன்று இணைபிரியாமல் வித்தையைக் கற்று நாலுவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணம் அறுபத்துநான்கு கலைக்ஞானம் தொண்ணூற்றாறுதத்துவ மனுவிக்யான முதலானதுகளெல்லாங் கற்றுணர்ந்தார்கள்.

இன்னுந்தங்களுக்குரிய யானையேற்றங்குதிரையேற்றம்வில் வித்தை முதலாகியதுங் கற்றுதேர்ச்சியடைந்தவர்களாயிருக்கின்றகாலையில் ஓர்நாள் அரசகுமாரனாகிய கேசரி மற்றுமூவரையும் பார்த்துச் சொல்லுகிறான் எநேசர்காள் நாம்நால்வருள் வித்தையில் யார் உயர்ந்தவர்கள் யார்தாழ்ந்தவர்களென்று பரிட்சிக்கவேண்டிய திருப்பதால் நம்முடையதாய் தந்தையர்களைஅழைத்

துக்கொண்டு நமது உத்தியானவனத்தை நாடிச் செல்வோம் வாருங்களென்று அரசகுமார னழைக்க அப்படியே மற்றுமுவர்களும் ஒத்துக்கொண்டவர்களாய்த் தங்கள் தங்கள் தாய்தந்தையர்களை அழைத்துக்கொண்டு உத்தியானவனம் வந்தாாகள் அப்போது அரசகுமாரனாகிய கேசரியானவன் தனது தோழர்களைப் பார்த்து சொல்லுகிறான் ஏ நேசர்காள் யாறோ இதோ நிற்கின்ற பலாவிருக்ஷத்தை என்னுடைய சாமர்த்தியத்தால் பாடி எறிக்கின்றேன் பாருங்களென்று பாடுங் கவி.

## அரசகுமாரனாகிய கேஸரி சொல்லும் கவி.

தஞ்சமென் றேழைத் தம்மைவந்தடையச்
  சமயமென் றெண்ணியத் தருணம்
வஞ்சனைபுரியு மாகொடும் பாவி
  வம்சமு மனைத்துமே வுலகிவ்
பஞ்சினிற் பொரியும் படிந்திடுந் தன்மைப்
  பாரினிற் பலருமே காண
பிஞ்சுடன் காயும்பழமுடன் வருக்கைப்
  பெருமரம்பற்றிய தம்மா.

வசனம்.

என்று இக்கவியை அரசகுமாரன் சொன்னவுடனே அனற்பொரியானது பஞ்சுப்பொதியிற் பட்டமாத்திரத்தில்அப்பஞ்சுப்பொதியானது எப்படிப் பற்றியெரியுமோ அதைப்போல் பெலாவிருட்சமானது பற்றி யெரிந்துவிட்டது இதைக்கண்ட மந்திரிகுமாரனாகிய மதிவதனன் சொல்லுகிறான் ஏ மித்ரா இதோபார் ஒருக்ஷணத்தில் பழயமாதிரியாக தழைக்கும்படி பாடுகின்றேன் பாருங்களென்று சொல்லுங் கவி.

## மந்திரிகுமாரனாகிய மதிவதனன் சொல்லுங் கவி.

அடுத்தவர் தம்மைக் கெடுத்தவன் செல்வ
  மகன்றுமே அம்பலத் தலைவன்
கொடுத்தவன் பொருளை யெடுத்துக்கொண்டவன்மேற்
  குற்றமுங் குறைசொலு மவனைத்
தடுத்துநன் னெறியை யுரைத்தவன் கிளைகள்
  தழைப்பதெப் படியோ அதுபோல்

தொடுத்திட மலரின் சாமுடன்வருக்கைத்
தோன்றுமென் றமைச்சனு முரைத்தான்.

வசனம்.

என்று இக்கவியை மந்திரிகுமாரனுகிய மதிவதனன் சொல்லவே பூமியின்கண் எரிந்து சாம்பலாய்க் கிடக்கின்ற அச் சாம்பல் பலாவிருக்ஷமாகத்தோன்றி தழைத்துநின்றது இதைக்கண்ட தளகர்த்தன் குமாரனுகிய மதிகுணன் சொல்லுகின்றான் எமித்திரர்காள் யானேஇவ்விருக்ஷத்திலுள்ள இலை மலர் பிஞ்சுகாய்முதலாகியதுகளெல்லாம்உதிரும்படிசெய்கின்றேன்பாருங்களென்று சொல்லுங் கவி.

## தளகர்த்தனுகியமதிகுணன்சொல்லுங் கவி.

தன்னிட மனைவியன்றித் தாயெனப் பிறரையெல்லாம்
எண்ணிடா யினர்வாழ்க்கை ஈடழிந் ததுபோலின்றென்
மன்னவர் காணப்பாரில் வருக்கையின் மலர்பிஞ்சோடும்
உன்னித மாகவேதான் உதிரென உரைத்தான்மாதோ.

வசனம்.

என்று இக்கவியைத் தளகர்த்தன் குமாரனுகிய மதிகுணன் சொன்னவுடனே பலாவிருக்ஷத்திலிருந்த இலை மலர்பிஞ்சு காய் முதலானதுகளெல்லாம் பலபலவென்று உதிர்ந்துவிட்டதுகள் இதைக்கண்ட தண்டத்தலைவன்குமாரனுகிய ஜெயசேனன்சொல்லுகின்றான் இதோ இப் பூமியின்கண்ணே உதிர்ந்துகிடக்கின்ற இலை மலர் பிஞ்சு காய் முதலானதுகளெல்லாம் முன்னிருந்தபடி போய் ஒட்டிக்கொள்ளும்படி பாடுகின்றேன் பாருங்களென்று சொல்லுங் கவி.

## தண்டத்தலைவன் குமாரனுகிய ஜெயசேனன் சொல்லுங் கவி.

அமரர்க ளிடுக்கண் களைந்திட வரியு
மயோத்தி நகர்வளர் கோமான்
குமரர்க ளாகி இராமலக்ஷ் மணனும்
கோமுறை விதிப்படி நடந்தான்
தமரொடு சுற்றங் களைந்திட பகைவர்
பயமொழித் திடுதல்மெய் யாகில்
நமதுவாக் கியத்தால் வருக்கையின் மலர்காய்
பிஞ்சுமுன் போலிதி லொட்டும்,

வசனம்.

என்று இக்கவியை தண்டத்தலைவன் குமாரனாகிய ஜெயசேனன் சொன்னவுடனே பலாவிருக்ஷத்தினின்றுங் கீழேஉதிர்ந்து கிடக்கின்ற இலை மலர்பிஞ்சு காய்முதலானதுகளெல்லாம் பழய படி விருக்ஷத்திற்போய் ஒட்டிக்கொண்டது அப்போதிந்தஜெய சேனனும் மற்றுமூவர்களும் தங்கள் தங்கள் சாமர்த்தியங்களைப் பேசிக்கொள்ள பின்பு இந் நால்வர்களுடைய தாய்தந்தையர்கள் இந்த ஆச்சரியங்களைக்கண்டு மகாசந்தோஷப்பட்டவர்களாயிருக்கின்றசமயத்தில்,

அரசகுமாரனாகிய கேஸரியானவன் மற்று மூவர்களையும் பார்த்துச் சொல்லுகிறான் அப்பாநேசர்களே நாம் நால்வர்களுக்குள் வித்தையில் ஒருவர்க்கொருவர்உயர்வு தாழ்வில்லாமலிருக்கின்றோமாகையால் நாம் நால்வரும் நமது தேசத்தைவிட்டுதேச சஞ்சாரஞ் செய்துஅவ்விடங்களிலுள்ள ஒவ்வோ ரரசர்களிடத்திலும் நாம் சென்று நமதுவித்தையினுடைய சாமர்த்தியங்களையெல்லாம்அவர்களுக்குக்காண்பித்து அனேகபரிசுகளைப்பெற்று திரும்பவும் நமதுநாட்டைத்தேடி வருவோம் வாருங்களென்று அரசகுமாரனழைக்க மற்றுமூவர்களும்அதற்கிசைந்தவர்களாகி தங்கள் தங்கள் தாய் தந்தையர்களிடம் இந்தச்சங்கதிகளையெல் லாந் தெரிவிக்க அவர்கள் இந்தச்சங்கதிகளையெல்லாங் கேட்டு மகா துக்காக்கிரந்தர்களாகி குழந்தைகளைப்பார்த்துச் சொல்லுகிறார்கள் அப்பா குழந்தைகளே உங்களுக்கு என்னகுறைவிருக்கிறதென்று தேசசஞ்சாரஞ்செய்து திரவியத்தைசம்பாதித்து வரப் போகிறீர்கள் போகவேண்டாம் மேலும் நீங்களோ அதிபால்யர்களாகையால் போகவேண்டாமப்பா குழந்தைகளே யென்று தடுக்கஇவர்கள் நால்வர்களும் அவாளைப்பார்த்துச் சொல்லுகிறார்கள் ஐயா தாய்தந்தையர்களே பூமியின்கண் எப்போது மானிடர்களாய் ஜெனித்தமோ அப்போதே யெதாவது ஓர்கீர்த்தியை அடையவேண்டுமே அப்படி யாங்களடையவேண்டியதிருப்பதால் நாங்கள் கட்டாயம்போகத்தான் வேண்டுமென்று சொல்லவேஇவாளுடையதாய்தந்தையர்கள் இவ்வார்த்தையைக்கேட்டு மகா துக்கப்பட்டவர்களாயிருந்தாலும் நமது பிள்ளைகள் ஒரே பிடிவாதமாய்ப் போகத்தான் வேண்டுமென்று சொல்லுகிறார்

களே நாம் தடுத்தாலும் கேழ்க்கமாட்டார்கள்போலுந் தோன்றப்படுகிறதாகையால் அவர்களி னிஷ்டம்போல் போய்வரும்படி உத்திரவு கொடுக்கும்படியாகத்தா னிருக்கிறதென்று ஒருவாறு மனந்தேறினவர்களாய் இந்நால்வர்களுக்குஞ் சொல்லுகிறார்கள்.

அப்பா குழந்தைகளே நீங்களோ ரொம்பவும் இளமைவயதுடையவர்கள் நீங்கள் எவ்வளவு வித்தையைக் கற்றிருந்தாலும் உங்களுக்கு வாலிபசேஷ்டைகள் யேற்படும் அதற் குடன்படாமல் நீங்கள்நால்வர்களும்ஒருவர்வார்த்தையை ஒருவர்தட்டாமல் அதிஜாக்ரதையாய் நீங்கள் யெந்தெந்த தேசத்திற்குப் போகவேண்டுமோ அந்தத்தேசங்களையெல்லாம் போய்ப்பார்த்துக்கொண்டு அதிக சிக்கிரத்தில் வந்து சேரவேண்டியதென்று சொல்லி இன்னுஞ் சொல்லுகின்றார்கள் அப்பாகுழந்தைகளே உங்களுக்கு யெந்தெந்த வஸ்துக்கள்வேண்டுமோ அதுகளைச்சித்தப்படுத்திக் கொண்டுசுகமாகப் போய்வாருங்களென்று இவர்கள்சொல்லவே அந்த நால்வரும் மகாசந்தோஷப்பட்டவர்களாய்த் தங்களுக்கு வேண்டுமான திரவியங்களை யெடுத்துக்கொண்டு சில சேனைதளங்களையுந் தங்களுடன் வரும்படித் திட்டஞ்செய்து இவாள்நால்வருந் தங்கள் தாய்தந்தையர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அஸ்வாரூடராகத்தானே தங்கள் தேசத்தை விட்டுப்புறப்பட்டு வேறுதேசம் வருகிறார்கள் அது எந்தெந்ததேசங்களென்றால்,

## ஏலப்பாட்டு.

கலிங்கநகராளும்வேந்தனவன்கருத்திற்கிசைந்துதித்தவனிமையுள்ளமைந்தன்கேசரியும்மற்றோர்வ்னநகரம்போகவெண்ணி நிலைதவறு அன்பர்நேசரொடுதான் நினைத்தயிடஞ்செல்ல வெண்ணி

(௬௬.)

விறைவுடன் பேூகவே புரவிகள் நான்கு
வேண்டியே அட்சணம் விசுமுடனங்கு
ஆழைத்துமே நேசரோ டவ்வாசினேறி
ஆனந்த மாகவே அன்னகரை விட்டுக்
கொத்துள்ள மணிகளைக் குப்பலாய்க் கொண்ட
கங்கைசூழ் கோசரண தேசத்தைக் கண்டு
அத்தேய காட்சியை அருமோடு கொண்ட

அன்பர்க ளவ்வூரில் அப்பொழுது நின்று
சேத்மீரங் காம்போஜங் காஸ்மீரந் தொட்டுச்
சேர்ந்துவாழ் நல்வளஞ் சிந்தூரம் விட்டு
ஜாத்திரம் பேசிடுங் கர்னுடம் நெட்டும்
சமஸ்தாநங் கண்டஞ்சும் நேப்பாள மீண்டும்
நேசித்த பப்பா நாட்டையுந் தீண்டி
நேசரோ டந்நகரம் நிருபனும் புக்கி
வேந்தனு மப்பொழுதோர் வேதியரைக் கண்டு
விடுதிகள் யெமக்குநீர் விடுவீரோ வென்று
வேண்டிய படியாக அமைத்ததைக் கண்டு
வீரரோ டவ்வளவில் விரைவுடன் சென்று
ஏலேலோ ஏலிலலோ

வசனம்.

மேற்சொல்லிய நால்வர்களும் எங்தெந்த தேசம் வந்தார்களென்றால் அங்க வங்ககலிங்க காஸ்மீர மராட விராட மச்சம் குச்சரம் சோழம் நிடதம்சாலவம் கொக்சி மலையாளம் கோகாணம் சேத்மீரம் காம்போஜம் சிந்தூரம் கர்னுடம் நேப்பாளம் இன்னும் அனேக தேசத் தரசர்களையெல்லாம் போய்க் கண்டு அங்கு தங்கள்வித்தையினுடையசாமர்த்தியங்களை யெல்லாங்காட்டி அனேக பரிசுகளைப் பெற்றுக்கொண்டு கடைசியாக பப்பா நாட்டிற்குவந்து அங்கோர் வேதியரைக்கண்டு ஐயா எங்களுக்கு ஓர் விடுதி வேண்டுமென்று அரசகுமாரன் கேட்க அந்த வேதியரும் இவர்களுக்கு ஓர் விடுதி யேற்படுத்திக்கொடுக்க இவர்கள் அதிற்போ யிறங்கியிருக்கப் பின்பு முன்னுற்சொல்லிய மோகனுளென்னுந் தாசியானவள் தனது மாடியின் முன்பக்கத்தில் எல்லோருக்குந் தெரியும்படியாய்தனது ரூபலாவண்யத்தைப்போல் ஓர் சித்திரப்படமொன்று வரைந்து அதனடியில்ஓரிரவிற்கு ஆயிரம்பொன் வாங்கிக்கொண்டு அவளது பதிவிரதாத்தன்மைக்குப் பங்கம்வாரமல் ஓர் நாயகனைச்சேர்ந்து அனுப்புவாளென்றுகீழே யெழுதி மேற்சொல்லியயிடத்தில் கொண்டுவந்து கட்டிவைத்து அனேக இராஜாக்களை யேமாற்றிக்கொண்டு வருகிறுள் அவள் எப்படி யேமாற்றிவருகிறுளென்றுல் தன்னைப்போ லழகுடைய இரண்டு தாதிகளை வைத்துக்கொண்டுதன் னுடைய கிரகத்திற்கு வரக்கூடிய அரசர்களிடத்தில் அயிரம்பொன் வாங்கிக்கொண்டு

அந்தத் தாதிப்பெண்களில் ஒருத்தியை அலங்கரித்து அங்குவந்திருக்கிற அரசர்களிடத்தில் அனுப்பிவைக்கிறது அவளு மப்படியே சென்று அவனுடன் கூடிக்கலந்து அவனுக்கு நல்ல இன்பத்தைக் கொடுத்து பொழுதுவிடிந்தபின் அனுப்பிவிடுகிறது அந்த அரசர்களும் இந்தச் சூதை அறியாமல் இவளே அந்த மோகனையென்று தங்களிடம் வரக்கூடிய அத் தாதிப்பெண்ணுடன் கலந்துவருவதோடுங்கூட தாங்கள் ஏமாந்துவருவது தங்களுக்கே தெரியாமல் வந்துவிடுகிறது.

இப்படியாகவே அந்த மோகனையென்னுந்தாசி அனேக அரசர்களை யேமாத்தித் தனது கற்புக்குக் கெடுதல்வராமலே காலத்தைக் கழித்துவந்தாள் இப்படி வருங்காலத்தில் தான் அவ்வூரரசனாகிய சிதாரந்தனுக்கு ஒருவாரத்திற்குள் வந்து அம்பலத்ததிசயம் பாடுகிறேனென்று சொல்லிவந்தவள் ஏழுநாளாகியும் ஒன்றும் பாடத்தெரியாமல் மயங்கிஐயோ தெய்வமே நாம் போய் இராஜசமுகத்தில் பாடாவிட்டால் நம்முடைய சிரசு போய்விடுமேயென்று யேங்கி அன்னாகாரமும் நித்திரையுமில்லாமலும் மயங்கி துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில் பின்பு வேதியர் வீட்டில் வந்திறங்கி யிருக்கின்ற நால்வருள் அரசகுமாரனாகிய கேசரியானவன் மந்திரிகுமாரனாகிய மதிவதனனைப் பார்த்துச் சொல்லுகின்றான் அப்பா மதிவதனா நாமிருவரும் இவ் வூருக்குட் பிரவேசித்து ஆங்குள்ள ஒவ்வொரு வேடிக்கைகளையுங் கண்ணுற்று திரும்பவும் இவ்விடம் வரலாம் வாவென்று அரசகுமாரனழைக்க மந்திரிகுமாரனு மதற்கிசைந்து மற்றவர்களையெல்லா மவ்விடத்திலேயே நிறுத்திவிட்டு இவர்க ளிருவரும் புறப்பட்டு அவ்வூருக்குள் பிரவேசித்து ஆங்காங்குள்ள ஒவ்வோரதிசயங்களையும் பார்த்துக்கொண்டு முன்னால் சொல்லிய மோகனையென்னுந் தாசியிருக்கிற வீட்டின்வழியாக வரும்போது அவளது உப்பரிகையின்பக்கத்தில் ரொம்பவும் பிரகாசமாகவும் வெளிச்சமானது தோன்றப்பட்டது அதை இவர்களிருவருங் கவனித்துப்பார்க்கும்போது அதற்கு சமீபத்தில் ஓர் படமானது எழுதியிருக்கவே அரசகுமாரனாகிய கேசரியானவன் அப்படத்தி லெழுதியிருக்கின்ற ஸ்திரீயினுடையரூபத்தைப் பார்த்தவுடன் ரொம்பவும் மோகாக்கிரந்தனாகி மூர்ச்சித்து கீழேவிழுந்துவிட்டான் அப்படிகீழே விழுந்த அரசகுமாரனை மந்திரிகுமாரன் தூக்கித் தனது மடியின்

பேரில் வைத்துக்கொண்டு சயித்தியோபசாரங்களால் அவனது சோகத்தைமாற்றவே அரசகுமாரன் கண்தெளிந்தெழுந்து அப்படத்தை செவ்வையாய்க் கவனிக்கவே அதனடியில் ஆயிரம்பொன் வாங்கிக்கொண்டு அவளது கற்புக்கு பங்கம்வராமல் ஓர் நாயகனைச்சேர்ந் தனுப்புவாளென்று எழுதியிருப்பதைக்கண்டு ஆச்சரியப்பட்டுத் தனது மந்திரிகுமாரனைப்பார்த்துச் சொல்லுகிறான் அப்பா மதிவதனா இதைப்பார்த்தால் இரதிதேவியும் இவளுக்கு இணையாகமாட்டாள்போலுந் தோன்றுகின்றதே மேலும் இவளது கூந்தல்நிறமானது மேகத்தினையுங் கமுகம்பாளையினையுங் கொன்றைக்காயினையும் உகாந்தஇருளையும் கரியமணலையுங்கொடிப்பாசியினையுங் கருமைபொருந்திய வண்டுக்கூட்டங்களையெல்லாம் பழித்தகூந்தலையும் மூன்றாம்பிறைச் சந்திரனையொத்தநெற்றியினையும் மன்மதன்வில்லையும் இந்திரன்வில்லையும் பழித்தபுருவத்தையும் வெள்ளைக்கொடியையும் கத்திரிக்கோலினைப்பழித்தகாதுகளும் வேலையுஞ் சேலையும் வாளையும் நீலோர்ப்பலத்தையும் அம்பையும்பழித்த கண்களும் குமிழம்பூவையுஞ்சாணைக்கல்லினையும் கண்ணாடியினையும் பழித்தகன்னங்களும் கொவ்வைக்கனியையும் இலவம்பூவையும் முருக்கமலரையும்பழித்த இதழும்முத்துகளைப்பழித்தபற்களும் பூரணச்சந்திரனையொத்த திருமுகமும்வலம்புரிச்சங்கையொத்தகண்டத்தினையும்மூங்கிலடியைநிகர்த்ததோளினையும் பைங்குரும்பையோ பம்பரமோ பர்வதமோ பூங்கமலமோ பூரணக்குடமோ புஷ்பகமோசொர்னச்செப்போ சொக்கட்டான்காயோ தாளமோ சக்ரவாகமோ யானைமத்தகமோஇவைகளில் யாதோதெரியாதென்று சந்தேகிக்கும்படி கவிந்து குவிந்து சிறுத்துப் பருத்து உருண்டுதிரண்டு நிமிர்ந்து தளர்ந்துஅண்ணாந்து இருமாந்துப் புடைத்துபூரித்து புளகாங்கிதங்கொண்டு அன்னரேகை அரசரேகை மயில்ரேகை குயில்ரேகை கிளிரேகைமுதலியசித்திரங்களெழுதி முத்துக்கச்சையிட்டிறுக்கி பொற்சரிகைதாள்கொண்டு பூட்டி வாகுமாலை வச்சிரமாலை பச்சைமாலைபவளமாலை முத்துமாலை மோகனமாலை இவைமுதலிய நவரத்தினமாலைகளை யணிந்து விளங்காநின்றகனஸ்தனங்களும் ஆலிலையைநிகர்த்தவயறும் தாமரைமலர்போன்ற கரங்களும் மகிழம்பூவுக்கொப்பாகிய நாபியினையும் சிறுசங்கிலிபோன்ற ரோமத்தாரையும் சிற்றுடுக்கையையும் மின்னற்கொடியையும்பூங்கொடியையும் மன்மதன் உடலினையும் நூலிழையையும் மூன்றாம்பிறைக் கொழுந்

தினையும் தோற்கச்செய்யும் இடையும் இளவாழைத் தண்டையும் யானைத்துதிக்கையையும் பழித்த துடையையும் நண்டைப் பழிக்கும்முழங்காலும் வராலினையும் எக்காளத்தினையும் அம்புறாத்தூணியையும் ஒப்பான கணுக்கால்களும் தராசுக்கொப்பான பாடகளும் அணிச்சமலரினும் மெல்லிய செம்பஞ்சுக் குளம்புகூட்டிய தாமரைமலர்போன்ற பாதங்களும் தங்கத்தைப் பழித்த திரேகமும இத்யாதிவைபவமுடைய இபபெண்ணையல்லவோ நாம் சேர்ந்துநல்லசுகசகதையடையவேண்டும் யென்றுஅரசகுமாரன் சொல்ல அதைக்கேட்ட மந்திரிகுமாரன் சொல்லுகிறான் ஏ மித்திரா பாரும் சாமோஜத்திரிய உதிரத்தில் ஜெனித்த அரசகுமாரனுக யிருந்தும் கேவலமான இத்தாசிவீட்டிற்குச்செல்லுவது இராஜநீதியல்ல மேலும் நாமோ அன்னியதேசமாகிய இப்பப்ரகாட்டிற்கு வந்திருக்கின்றோம் மேலும்இத்தாசியானவள் இப்படத்தின்கீழே வரிந்திருக்கின்ற சங்கதியைப் பார்த்தால்யேதோ கபடமாகத் தோற்றப்படுகிறது ஆகையால் நீ அவ்விடம் போகவேண்டாம் வாவென்று மந்திரிகுமார னழைக்க அதைக் கேட்ட இராஜகுமாரன் மந்திரிகுமாரனைப் பார்த்துச் சொல்லுகிறுன் அப்பா மந்திரிகுமாரனுகிய மதிவதனு நான்சொல்வதைக் கேள் இந்தமோகனுளென்னுந் தாசியானவள் தான்யேதோ ஆயிரம் பொன்னை வாங்கிக்கொண்டுதனது கற்புக்குப்பங்கம்வராமல் ஓர் நாயகனைச் சேர்ந்தனுப்புவதாய் இப்படத்தின் மூலியமாய்த் தெரியவருகிறது ஆகையால் நான் அவளுடைய கிரகத்திற்குச் சென்று அவளதுகற்புக்கு பங்கம்வராமல் யெப்படி நம்மைச்சேருகிறுளென்று பரீக்ஷிக்கவேண்டிய திருப்பதால் நீ சீக்கிரம்சென்றுஆயிரம்பொன்னை யெடுத்துக்கொண்டுவாருமென்றுசொல்ல மந்திரிகுமாரன் யெவ்வளவோ தடுத்தும் அரசகுமாரன்கேட்கவில்லை ஏனென்றால் இவனுடைய ஜாதகப்பலனும் இப்பெண்ணால் இன்று இவன் மரணமடைய வேண்டியதிருப்பதால் கட்டாயம் போகவேண்டுமென்று அரசகுமாரன்சொல்லுகிறுன் மறுபடியுந் தடுத்து மந்திரிகுமாரன் சொல்லுங் கவி.

கவி.

நெற்றியில்திலர்தமிட்டு நேர்விழிமையுந்திட்டி
பற்றியஉடலுக்கெல்லாம் பசைதருவாசம்பூசி
பொற்றிரைமணிகளாடை புகழ்ந்திடுஞ்சிலம்புங்கொஞ்ச
வெற்றியைக்கெடுக்குமந்த வேசியிவினைவைத்தள்ளே.

வசனம்.

என்றுமந்திரிகுமாரன் சொல்லவே அதைக்கேட்ட அரசகுமாரன் மந்திரிகுமாரனைப்பார்த்துச் சொல்லுங் கவி.

கவி.

கனிகைமேற்கொண்டகாதல் கருத்தினிலறிந்தேசொன்ன
மணிவடமணியுமெந்தன் மனதினிற்கிலசந்ததோளா
தணிதல்நீசொல்லவேண்டாம் தையலாளோடுகூடி
துணைவனேவாரேனென்று தோகையினகமேசென்றான்.

வசனம்.

என்று அரசகுமாரன் மந்திரிகுமாரனைப்பார்த்துச்சொல்லுகிறான் அப்பா மதிவதனா நீ யெனக்குத்தெரிவிக்கின்றவார்த்தைகளெல்லாம் உண்மையேயானாலும் யானெப்போது அவள்மீது காதல் கொண்டவனோ அவ்விதகாதலைத்தீர்த்துவிட்டுசூரியஉதையத்திற்குள் உம்மிடம்வந்து விடுகின்றேனகையால் நீஅதிசீக்கிரஞ்சென்று ஆயிரம்பொன் எடுத்துக்கொண்டு வாவென்று சொல்ல அப்படியே மந்திரிகுமாரன் யெடுத்துக்கொண்டுவந்து கொடுக்க அதைப் பெற்றுக்கொண்டு மோகனுளென்னுந் தாசி வீடுவந்துசேர்ந்து தான்கொண்டுவந்த ஆயிரம்பொன்னையும் அவளுடைய காரியஸ்தர்களிடம் கொடுத்துவிட்டுத் தான் அவளது அம்சதூளிகாமஞ்சத்திற் போய் அமர்ந்துக்கொண்டு தனது வரவை மோகனுளுக்குத் தெரிவிக்கும்படியாய் சுற்றுச்சொல்லிகளிட முரைக்கஇதுசங்கதியைக் சுற்றுச்சொல்லிகள் அறிந்துதங்கள் யெசமானியாகிய மோகனுளிடம்போய்த் தெரிவித்தார்கள் இவ்வார்த்தையைக்கேட்ட மோகனுள் தன்னிடத்திலிருக்கின்ற இரண்டுபெண்களில் ஒருத்தியை தன்னைப்போ லலங்கரித்து ஒர் தட்டில் அனேக பண்டுபலகார தாம்பூலவர்க்கங்களையெல்லாம் வைத்து அரசகுமாரனிடமனுப்பினுள் அத்தாதியு மப்படியேசென்றுஅரசகுமாரனமர்ந்திருக்கின்ற அம்சதூளிகாமஞ்சத்திற்போயமுர்ந்தனள் அப்போதுஅரசகுமாரன் அவள்அம்சதூளிகாமஞ்சத்தில்வந்துஅமர்ந்ததையும்அவளது நடைகொடி பாவனையையும் லக்ஷணங்களையும்பார்த்து ஆச்சரியப்பட்டு என்னகேவலம்இவளதுரூபத்தைப்பார்த்தால்ஆயிரம்பொன்வாங்கும்படியானயோக்கிதை யிவளிடத்தி லில்லையே இவள்ஆயிரம்பொன் வாங்கக்கூடிய

தாசியானாலும் இவளது யோக்கியதையை இன்னமும் பரிக்ஷிப் போமென்று அன்னவளைப்பார்த்துச்சொல்லுகிறான் ஓ பெண்பாவாய் நீ எனக்குச்சற்று சுருள்மடித்துக்கொடுக்கவேண்டுமென்று சொல்ல அப்போது அவளுமப்படியே மடித்துக்கொடுக்க கடைசியில் தான்கிழித்த வெற்றிலைக்காம்பை வாயிற்போட்டுக்கொண்டாளதையறிந்த அரசகுமாரனவளைப்பார்த்துச்சொல்லுகிறான் அடி தாசி கேவலம் நீபோ இவளுடைய கிரகத்தில்புழுக்கைவேலை செய்யக்கூடியவளாய்க் காணுகின்றாய் நீயா என்னை யேமாற்றக் கூடியவளென்று கோபங்கொண்டு சொல்லுங்கவி.

கவி.

கயல்விழியானமாதைக் கருதியான்வந்தஅந்தப்
புயல்நிகர்கூந்தலாளைப் பூவையேவிட்டுநீதான்
பெயரதுபெறலாமென்று பேதையேநினைத்துவந்தாய்
மயல்வலைப்படுவேனோநான் மங்கையேயகலப்போடி.

வசனம்.

என்று அரசகுமாரன் இப்படிச்சொல்லவே இதைக்கேட்ட தாதியானவள் மகா வெட்கப்பட்டு அடடா நாம் இதுவரையில் யெத்தனையோ இராஜாக்களையெல்லாம்ஏமாத்திவந்தோம்இவனையாம் ஏமாற்ற முடியவில்லையேயென்று விசனப்பட்டு தனதுஎஜமானியிடம்வந்து அங்குநடந்த சங்கதிகளையெல்லாமுரைத்தாள் இதைக்கேட்ட மோகனாள் மகாதுக்கப்பட்டவளாயிருந்தாலும் இன்னொருபெண் ணிருக்கிறாள் அவளையும் அனுப்பிப்பார்ப்போமென்று அவளையழைத்துச்சொல்லுங் கவி.

கவி.

மங்கையாளுரைத்தசொல்லை மருங்குழாள்தானுங்கேட்டு
அங்கமும்பதறிவேறு ஆரிவையின்வதனம்நோக்கி
இங்ஙனம்நீயேசென்றவ் வேந்தனைக்கலவியாலே
அங்கமுமகிழச்செய்யென் றனுப்பினாள் தலைவிதானும்.

வசனம்.

என்று மோகனாள் தனது இரண்டாவது தாதிப்பெண்ணைப் பார்த்துச் சொல்லுகிறாள் ஓ பெண்ணே நீ அந்தஅரசகுமாரனிடஞ்சென்று அவனை எப்படியாவது யேமாற்றி அவனுடன்கூடிக் கலந்து வரவேண்டுமென்று சொல்லவே அவளுமப்படியே சம்ம

த்து அரசகுமாரனிடஞ்சென்றுள் அப்படி இவள்சென்றபோது அரசகுமாரனிவளைப்பார்த்தான்பார்த்தவுடன் அட்டாகாம்பட்டத்தில்கண்ட மாதுஇவளல்லவேஇதுயேதோ கபடமாகத்தோற்றப்படுகிறது ஆகையா லிவளையும் பங்கப்படுத்தி அனுப்பவேண்டுமென்று யெண்ணங்கொண்டுஅவளைத்தன்னருகிலழைத்துச்சொல்லுகிறான் அடிபெண்ணே இதோயிருக்கின்ற தீபமானது மங்கலாய் எரிகின்றதுஅதைசிக்கிரந் தூண்டிவிடென்றுசொல்லவே இவளவசரத்தில்தனதுவிரலால்தூண்டிவிட்டு அவ்விரலைத்தனது சிரசில் தடவிக்கொண்டாள் இதைக்கண்ட அரசகுமாரன் மகா கோபங்கொண்டு அத்தாதியைப்பார்த்துச் சொல்லுங்கவி.

கவி.

கலவியுஞ்செய்வாயென்று கருத்துடனுனக்குச்சொன்ன
தலைவியைவிட்டுவேந்தன் தனையனைக்கெடுக்கவெண்ணி
குலமுறைதப்பச்செய்த கோதையின்முன்பாபோடி
சிலைமதன்கணையைவெல்ல சீக்கிரம்வரச்செய்வாயே.

வசனம்.

என்று அரசகுமாரன்சொல்லத் தாதியானவளதைக்கேட்டு மகாவெட்கப்பட்டுத்தனதுயெஜமானியிடத்தில்வந்து அவ்விடம் நடந்தசங்கதியைச்சொல்லவே அவ்வார்த்தையைக்கேட்டமோகனாள் மகாதுக்கப்பட்டவளாய்ஐயோதெய்வமே நானென்னசெய்வேன் யானேஇதுவரையில் யெனதுகற்புக்குக் கெடுதல்வராமல் காலத்தைக் கழித்துவந்தேன் நாளைய சூரியஉதயத்திற்குமேல் நமதுசிரசும் போய்விடப்போகிறது இப்போது நமதுகற்புக்கும் பங்கம் வந்துவிட்டது நாமென்னசெய்யலாம் நம்மால் ஆகப்போகிற காரியம்ஒன்றுமில்லை யெல்லாவிஷயத்திற்கும் கடவுள்ஒருவரிருக்கிறாரென்பதாக ஒருவாறு மனந்தேறினவளாய் தனதுகரத்தில் வீணையை யெடுத்துக்கொண்டு அரசகுமாரனிருக்குமிடம் வருகிறாள்.

மோகனாள்வருகிற கவி.

வாதித்தமன்னரை நேசித்துஅவர்பொருளை
வந்தித்துக் கொள்ளயெண்ணி
சாதித்துஅவரோடு ஆதித்தன்வருமளவுஞ்
சரசத்தில் மூழ்குபவரை

பேதித்தனுப்பிய பெண்ணவளுமுன்னளில்
பெற்றதோர் நினைவுகொள்ள
காதித்தகாளையைக் காணவேவந்தனள்
கடுமனங் கொண்டநல்லாள்

வசனம்.

என்று மோகனுள் அரசகுமாரனிடத்திற்கு வரவே அரசகுமாரன் அவளைப்பார்த்து சபாஷ் இவளல்லவோ ஆயிரம்பொன் வாங்கும்படியான தாசி இவளுக்கல்லவோ அந்த ஆயிரம்பொன் தருமென்று மகாசந்தோஷமடைந்து அவளை தன்னருகில் அழைத்து அவள்மீது மகாமோகங்கொண்டவனுய் சொல்லுகிறுன் ஆ என் னுவிபே நான்மகாபாவியே யென்னைக்கொல்லுவது உன்னுசைவசனுபியே வசந்தகாலவண்டைப்போல் உன்வாய்மலரில்சுரக்குந்தேனை உண்டு பிர்மானந்தமடையக் கருதுகின்றேன் ஆஅஞ்சுகமே மிஞ்சியமோகத்தால் கெஞ்சும் யானே உனக் குடன்பாடாகிய கிரீட்டி நீயோ யெனக்கிசைவாகிய கண்ணுட்டி அடிசிமாட்டி பார் உலகின்கண்ணுள்ளவர்களெல்லாம்உன்னழகைக்கண்டு உன்பின் தொடரவேண்டுமேயன்றி வேறுண்டோ அடிஅலங்காரமென்பனவெல்லாம் அலங்காரமாக அமைந்த அடி மையலே நீ யெவ்வளவு சுகங் கொடுக்கின்றனையோ அதற்கிசைந்த போகம் யான் தருகின்றேன் இதுசமயம்யென தருகாமையில் வீற்றிருந்து காதுக் கினிமையாக சிங்காரரசத்தில் ஓர்பதம் பாடுவாயடி கண்மணியேயென்று அரசகுமாரன் சொல்ல அதைக்கேட்டதாசியாகியமோகனுள் அப்படியே ஆகட்டுமென்று தான்பாட ஆரம்பித்தாள் அப்படி இவள்சிங்காரரசமாய்ப்பாடினுலும் தனக்கு விடிந்தால் பிராணன் போய்விடப்போகிறதேயென்கிற வியாக்கூலம்அடிக்கடி இவளை வந்து பற்றிக்கொண்டிருப்பதினுல் இவள்எவ்வளவோ சாமர்த்தியஞ்செய்து சிங்காரரசம்பாடினுலும் அதுசோகரசமாகவேவந்து முடிவாகிறது இதைக்கண்ட அரசகுமாரன் அவளைப்பார்த்துச் சொல்லுகிறுன் ஓபெண்பாவாய் நாமோ ஏகாந்தமாய் சையாக்கிரகத்தி லம்சதூளிகாமஞ்சத்தின்மீதுவீற்றிருந்து உல்லாசமாயிருக்கிற சமயத்தில் யேதோ சிங்காரரசமாய்ச்சிலபாடலைப் பாடென்றுல் நீ சோகரசமாய்ப்பாடுகிறுய் மேலும் உனது முகாரவிந்தமானதும் ஓர்வித வாட்டத்துட னிருக்கின்றது அப்படி உனக்கு யாரால்என்ன துன்பம் நேரிட்டதென்று கேட்டப் பின்னுந் தான்சொல்லுங் கவி.

கவி.

முறைமையைவிடுத்துநீயும் மொய்குழாளிருவர் தம்மை
குறைவுறஅனுப்பிவைத்தக் குரும்பைமென்முலேயினுளே
அறைகுவாயுனக்குவாய்த்த அத்துயரனேத்துந்தீர்த்து
இறையவன்செல்வேனென்முன் யேந்திழைபகருவாயே.

வசனம்,

என்று அரசகுமாரன் மோகனுளைப்பார்த்துச் சொல்லுகிறான் பெண்ணே இன்னும் உனக்கு எப்பேர்ப்பட்ட துன்பங்களிருந்தாலும் அதை என்முன்தெரிவிப்பாயாகில் அவ்விததுன்பங்களையெல்லாந் தீர்த்துப்பின்பு உன்னேடு கூடுகின்றேனென்று அரசகுமாரன் சொல்ல அதைக்கேட்ட மோகனுளாகிய தாசி சொல்லுங் கவி.

கவி.

ஏருற்றுவளநாட்டைவிறைவாகவிட்டுநீ
 ரினிமையாய் வந்துயெந்தன்
வாருற்றுமடவார்கள் காதலைப்போக்கிடா
 வஞ்சித்தனுப்பு மன்னு
பேருற்றுயிப்பதியில் நிகழ்ந்ததோர்காரியம்
 பேதையா னறியாமையால்
ஊருற்றிருந்தனவ் வுண்மையைவிளைத்திடும்
 உலகாளு மன்னர்மன்னு

வசனம்.

என்று மோகனுள் அரசகுமாரனைப்பார்த்துச் சொல்லுகிறாள் ஓ பிராணேசா யநேனேஇவ்வூ ராசனிடத்தில் அம்பலத்ததிசயம் பாடுகிறேனென்றுசொல்லிவந்து எழுநாளாயிற்று இதுவரையில் எனக்கு ஒன்றும்புலப்படவில்லை நாளையகாலையில் போய் பாடாவிட்டால் என்னுடைய சிரசுபோய்விடுமே நானென்னசெய்வேனென்று அயர்ந்து மஞ்சத்தின்மீது விழுந்துவிட்டாள் அப்போது அரசகுமாரன் அவளையெடுத்து தனதுமடியின்மீதுவைத்துக்கொண்டு பிரியவசனங்களால் அவளதுசோகத்தைமாற்றிச் சொல்லுகிறான் அடிபெண்ணே நீ இந்தப்பெரியகாரியத்திற்குத் தானு இவ்வளவு சோகமுற்றனை இதோ ஒரு நிமைக்குள் நான்

பாடித் தருகிறேன் நீநாளைக்கு அரசசமுகத்திற்போய்ப்பாடுவாய் அதற்காக நீபயப்படவேண்டாமென்றுபாடிக் கொடுக்கும்

கவி.

திருவுலாவிய மார்பனேமற் றெவரோடாயினும்
மருவிவாழ்வது மங்கையற்கழகுதான்
உருவிலாதொருவனை உயர்குலத்தரிவைபோய்
அரியதோள்சேர்வது அம்பலத்ததிசயந்தான்.

வசனம்.

என்று அரசகுமாரன் இக்கவியை எழுதிக்கொடுக்கவே அத்தாசியானவள் அக்கவியைப் பெற்றுக்கொண்டு அரசகுமாரனை முடித்துவிடவேணுமென்று வஞ்சகமனமுடையவளாய் அரசகுமாரனைப்பார்த்துச் சொல்லுகிறாள் ஓ பிராணபதி நான் இதோ வெளியேபோய் சற்றுநேரத்திற்குள் வந்துவிடுகிறேன் எனக்கு உத்திரவு கொடுக்கவேண்டுமென்று கேட்க அரசகுமாரன் அச்சூதையறியாமல் அதிசீக்கிரத்திற் போய்வாவென்று உத்திரவு கொடுக்க உடனே மோகனாள் வெளியேவந்து தனதிடத்திலிருக்கின்ற காவலர்களில் இருவரை அழைத்துச்சொல்லுகிறாள் அடா காவலர்களே நீங்கள் சென்று வந்திருக்கின்ற அரசகுமாரனைச் சம்மாரஞ்செய்து அடக்கம்செய்துவிட்டு வந்துவிடுங்களென்று சொல்லஅப்படியே காவலர்கள் சென்று அரசகுமாரனை இருதுண்டாக வெட்டி அடக்கஞ்செய்துவிட்டு, தங்களிருப்பிடம் வந்துவிட்டார்கள் இதுநிற்க மேற்சொல்லிய அவ்வூராசனாகியசிதாநந்தனானவன் தனது சமுகத்தில் ஓர் தாசியானவள் அம்பலத்ததிசயம் பாடப்போகிறபடியால் தாங்களெல்லோரும் வந்துஅவ்விதசாமர்த்தியத்தைப் பார்த்து ஆனந்திப்பீர்களென்று திருமுகமெழுதி ஐம்பத்தைந்துதேசத்தரசர்களுக்கும்தெரிவித்தான்உடனே ஐம்பத்தைந்துதேசத்தரசர்களும் வந்து சேர்ந்து கொலுநிறைந்தார்கள் அப்படி கொலுநிறைந்திருக்கின்றசமயத்தில் மேற்சொல்லிய மோகனாளென்னுந் தாசியானவளும் அச்சபைக்குவந்துசேர்ந்தாள் அவளை அரசன் பார்த்துச்சொல்லுகிறான் ஓ பெண்பாவாய் நீ தெரிவித்தபடி அம்பலத்ததிசயம் பாடும்படியானதினம் இன்றல்லவா ஆனதால் அரசர்களெல்லோரும் வந்திருக்கின்றார்கள் இச்சபையின்கண் பாடுவாயாவென்று அரசன் கேட்க ஆ ஆ அப்படியே பாடுகிறேனென்று தாசியானவள் சொல்ல அதைக்

கேட்ட அரசன்பாடும்படி உத்திரவளித்தான் உடனே இராத்திரி தன்னிடம் வந்திருந்த கேசரிமகாராஜன் எழுதிக்கொடுத்த அம்பலத்ததிசயக் கவியில் முதலாவது அடியை இவள் யெடுத்துச் சொன்னமாத்திரத்தில் அரசன் சந்தேகங்கொண்டு பாடுவதை நிறுத்தச்சொல்லி தாசியைப்பார்த்துச் சொல்லுகிறான் ஓ தாசி இக் கவியானது ஆண்பாலின் வாக்கியமாயிருப்பதால் இக்கவியை நீயே பாடினையா அல்லது இன்னும் யாராவது பாடிக்கொடுத்தார்களாவென்று உண்மையை விசாரித்துக்கொண்டிருக்க அப்போது நாழிகை ஏழரையானபடியால் இராத்திரி தாசிவீட்டிற்குப் போன நமது அரசனைக் காணுமேயென்றுமந்திரிகுமாரனுகிய மதிவதனன் வருத்தப்பட்டு தண்டத்தலைவன் குமாரனுகிய ஜெயசூரனை அழைத்துச் சொல்லுங் கவி.

கவி.

நல்லாளின்மயக்கத்தாலே நவிலொணுமனையிற்புக்கி
மல்லனும்விரகம்பேர்த்த மகிழுறச்சென்றகோமான்
எல்லவனுதித்துநாழி யேழறைக்கதிகமாச்சு
சொல்லுதல்தவிர்க்காவண்ணம் தோழனையழைத்துவாராய்

வசனம்.

என்று மந்திரிகுமாரனுகிய மதிவதனன் சொன்னவுடனே தண்டத்தலைவன் குமாரனுகிய ஜெயசூரன் சீக்கிரம் ஓடோடியும் வந்து தாசிவீட்டிற் புகுந்துபார்க்கையில் அரசகுமாரன் அங்கு இல்லாமையால் தியங்கி இராஜசமுகத்தில் யேதோஅதிசயம்நடக்கிறதென்று தெரிந்து அந்தஇராஜசமுகத்திற்குள் பிரவேசித்து அரசகுமாரனைத் தேடிப்பார்த்துவருகையில்இவனை மேற்சொல்லியசிதாநந்தமகாராஜன் பார்த்து யேதோஇவன் வேறொருதேசத்து இராஜசேவகருள்ளவனுக யிருக்கிறதென்று சந்தேகங்கொண்டுமேற்படிஜெயசூரனைஅரசன் அருகிலழைத்து நீயார்எத்தேசத்திலுள்ளவன் இத்தேசத்திலுள்ளவனல்லவே இந்தப்பெருத்தராஜசபையில்மிரளமிரள விழித்துச் சுற்றுமுற்றும்பார்த்துக்கொண்டுவரவேண்டியகாரணமென்னவென்று அரசன் கேட்க ஜெயசூரன்சொல்லுகின்றான் ஓ ராஜராஜேஸ்வரா நான் கலிங்கதேசத்து அரசனுடைய தண்டத்தலைவனது குமாரன் என்பெயர் ஜெயசூரன்என்னுடன் இன்னம் மூன்றுபேரோடு இத்தேசத்திற்குஒர் காரணார்த்தமாக வந்தோம் இராத்திரி எனது அரசகுமா

ரன் ஓர் தாசிவீட்டிற்குப்போய் வருவதாகச் சொல்லிவிட்டுவந்த வரை இந்நேரவரையில் காணாமையால் அத்தாசிவீடுமுதல் மற்ற யிடங்களெல்லாந் தேடிப்பார்த்தும் காணாமையால் இச்சமுகத்தில் யேதோ அதிசயம் நடக்கிறதாகத் தெரிந்து இவ்விடத்திற்கு எங்கள் அரசகுமாரன் வந்திருப்பாரென்கிற நினைவுகொண்டு அரசகுமாரனைப் பார்த்துக்கொண்டுவந்ததும் தாங்களென்னைக் கண்டதும் இதுதான் என்னுடையவரலாறென்று ஜெயசூரன்சொல்ல அரசன் இவைகளையெல்லாங்கேட்டு சற்றுயோசித்து இவனுக்கு கவித்திறமை உண்டென்றுதெரிந்து உனக்கு அம்பலத்ததிசயம் பாடத்தெரியுமாவென்று கேட்க பாடத்தெரியுமென்று ஜெயசூரன் சொல்ல ஆனல் பாடுமென்று அரசன் உத்திரவளிக்கவே ஜெயசூரன் அம்பலத்ததிசயம் பாடுங் கவி.



க வி.

கடிமலர்பந்துகொண்டு கணவனுரெரியக்காய்ந்து
இடியெனச்சோர்ந்துவீழ்ந்த யேந்திழையொருத்திசென்று
அடிமையாய்முடவன்முன்னே அகம்வெளுத்தடியும்பட்டு
வடிகணீர்துடைத்துச்சேர்ந்த வகையதுமதிசயந்தான்.

வசனம்.

என்று ஜெயசூரன் பாடி முடித்தவுடனே அரசன் கேட்டு ஆச்சரியமும் நாணமுமுற்று இன்னமும் என்னநடக்குமோ பார்ப்போமென்று ஜெயசூரனை ஓர் அறையில் காவலுக்குள் வைத்து மறுபடியும் தாசியினுடைய உண்மையை விசாரித்துக்கொண்டிருக்கப் பின்பு மந்திரிகுமாரனுகிய மதிவதனன் நாம் அனுப்பிய ஜெயசூரனைக் காணோமேயென்று சற்று வியாக்கூலமடைந்து தளகர்த்தன் குமாரனுகிய மதிகுணனை யழைத்துச் சொல்லுங்

க வி.

உலகமும்பழிக்கும்நம்பி லுயர்ந்தவன்மெல்லியோடு
கலவியுஞ்செய்யச்சென்றான் கழில்பெரும்நமதுகோமான்
நிலதமுமணிந்துசெம்பொன் திரட்டுவாள்மையற்சிக்கி
நலமதைத்தவிர்த்துக்கொண்ட நரேந்திரனையழைத்துவாராய்.

வசனம்.

என்று மந்திரிகுமாரன் இக்கவியைச் சொல்லி முன் தாசிவீடுசென்ற அரசகுமாரனையும் அவரை யழைத்துவரும்படி பின்

னனுப்பிய தண்டத்தலைவன் குமாரனையும் இன்னேரவரையில்கா ணேம் ஆகையால் நீ சீக்கிரஞ்சென்று அவ்விருவரையும் அழை த்துவாருமென்று மந்திரிகுமாரனுகிய மதிவதனன் சொல்ல அப் படியே அழைத்துவருகிறேனென்று ஓடோடியும்வந்து தாசிவீடு முதல் மற்ற சகலயிடங்களிலுந் தேடிக்காணுமல் மேற்சொல்லிய இராஜசமுகத்திற்குட் பிரவேசித்து இருவரையுந்தேடிப்பார்த்து வரும்போது அரசன் இவனையுங் கண்டு சந்தேகங்கொண்டு இவ னது விர்த்தாந்தங்களை யெல்லாங் கேட்டு ஒகோ இவனும் கவி பாடும்படியான சமர்த்துள்ளவ னென்று தெரிந்துக்கொண்டு ஓ பிள்ளாய் உனக்கு அம்பலத்ததிசயம் பாடத் தெரியுமாவென்று கேட்க அப்போது மதிகுணன் சொல்வதாவது ஓ ராஜேஸ்வரா யேதோ கூடியமட்டும் பாடுவேனென் றுரைக்க பாடுமென்று அரசன் உத்திரவளிக்க மதிகுணன் அம்பலத்ததிசயம் பாடும்

கவி.

வெண்பா.

கம்பத்தூணுட்டிக் கனகவிளக்கேற்றிச்
செம்பொன்மலரணையைச் சேராமல்—அம்புவியில்
புல்லுருவிமூட்டிப் புகைத்தாளிளமுலையாள்
சில்லுதிராமுத்துதிரச் சென்று.

வசனம்.

என்று இக்கவியைச் சொன்னவுடன் அரசன் சந்தோஷம டைந்து நீயும் காவலி லிருவென்று அவனைக் காவலில் வைத்து பிறகு அத்தாசியிடத்தில் உண்மையை தெரிந்துக்கொள்ளவேணு மென்ற எண்ணத்தினுல் அத்தாசி அம்பலத்ததிசயம் பாடியஉண் மை விளங்கும்படியான முயற்சி செய்துக்கொண்டிருந்தான் இப் படியிருக்க முன்சொன்ன மந்திரிகுமாரனுகிய மதிவதனன் நெடு நேரவரையில் இவாள் மூவருமே வராதிருப்பதைக்கண்டு மகாதுக் காக்கிராந்தனுய்ப் பரமசிவனை நினைத்துச் சொல்லிய

கவி.

பரிசுநாமடைவோமென்று பலபலநாட்டைத்தேடி
வரிசையாய்வந்தவேந்தன் வஞ்சிமேற்காதல்கொண்டு
துரிதமேற்கொண்டயெந்தன் தோழனைத்தேடிச்சென்ற
பரிசனத்தாரைக்காணேம் பரமனேயென்செய்வேனே.

வசனம்.

என்று இப்படி மனவருத்தமுற்று மகாகோபக்கிராந்தனுய் தனக்குரிய மந்திரி சன்னுத்தனுய்ப் புறப்பட்டு தாசி மோகனுடைய வீட்டிற்குச்சென்று பார்க்கையில் அவ்விடத்தில் ஷதாசியைக் காணமல் வயறெரிந்து நம்முடைய ராசகுமாரனுக்கு என்னமோ ஆபத்து நேரிட்டதென்று தனக்குத் தோன்றி மகாவீராவேசத்துடனே அவ்விடம் சுத்திப்பார்க்கையி லவ்வீட்டைக்காக்கும் காவற்காரர்க ளிருக்கக்கண்டு மந்திரி இவாளை விசாரித்தாலுண்மை வெளியாகுமென்று மகா கோபதீப்தனுய் அடா காவலாளிகளே இராத்திரி யென்னுடைய அரசகுமாரன் உங்கள் எஜமானியிடத்திற்கு வந்தாரே உங்க ளெஜமானி எங்கே என் அரசகுமாரன் எங்கே உண்மையைச் சொல்லுங்களென்று கண்களில் தீப்பொறி சிதற மந்திரிகுமாரன் கெற்சித்துக் கேட்குமளவில் காவலாளிகள் மிகவும் பயந்து நாவெழாமல் வாய் குழறுவதைக் கண்டு மந்திரிகுமாரன் இவாளிருவரையும் அவ்வூர் காவற்காரர்களிடம் இவர்களை இந்த இராஜசமுகத்தில் கொண்டுவந்துவிடவேண்டியதென்று மந்திரிகுமாரன் உத்திரவளித்துத் தான் அஸ்வத்தின்பேரில் ஏறிக்கொண்டு இராஜசமுகஞ் செல்லுகையில் காவற்காரர்கள் இக்கொலையாளிகள் இருவரையும் கட்டி மந்திரியோடு கூடவே இராஜசமுகத்தில் கொண்டுவந்துவிட்டார்கள் இவர்களையெல்லாம் இராஜன் கண்டு மந்திரிகுமாரனுக்குத் தகுந்த மரியாதைசெய்து ஆசனமளித்து அதிலமரச்செய்து மந்திரிகுமாரனைப் பார்த்து அரசன் ஐயா தாங்கள் யெந்ததேசம் உங்களுடைய வரலாறென்னமோ அதையும் குற்றவாளிகளைக் கட்டிக்கொண்டு வந்து என்சமுகத்தில்விட்டகாரணம் யாதோ தாங்க ளொருதேசத்து மந்திரிகுமாரன்போலுங் காண்கின்றது ஆகையா லிதுவிபரங்களை யெனக்குச் சொல்லவேண்டுமென்று அரசன் கேட்க அப்போது மந்திரிகுமாரனுகிய மதிவ்தனன் சொல்லுகிறுன் ஓ இராஜசேகரா நாங்கள் கலிங்க நகரத்தையாளும் யாதவ மகாராஜன் புத்திரனுகிய கேசரியென்னும் ராஜகுமாரனும் அவருடைய மந்திரிகுமாரனுகியயானும் தளகர்த்தன் குமாரன் தண்டத்தலைவன் குமாரன் ஆகநாங்கள் நால்வரும் ஓர் காரணார்த்தமாக யாத்திரைவாசிகளாய்த் தேசங்கள்தோறும்போய்த்திரும்பிவருகையில் இன்னகரத்தைக்கண்டு இவ்விடத்தில் ஓர் அதிசயம்கடப்பதாய்த்தெரிந்து இவ்வூர் நகரத்தில் ஓர் வேதியரால் எங்களுக்கு ஓர் விடுதி

ஏற்படுத்திக்கொடுக்க அவ்விடுதியில் நாங்களிருக்குந்தருணத்தில் எங்களரசகுமாரனாகிய கேசரியானவர் என்னை யழைத்து அப்பா நாமிருவரும் உல்லாசமாக இப்பட்டணத்தைப் பார்த்துவரலாம் வாவென்று அழைக்க யானுமப்படியே நல்லதென்று புறப்பட்டு நாங்களிருவரும் வீதிகள்தோரும் பார்த்துக்கொண்டு வருகையில் ஓர் வீட்டில் மோகனாளென்னுந் தாசியானவள் தன்வீட்டின் தெருவாசற்படியில் ஓர் படமெழுதி அதன்கீழ் ஓரிரவிற்கு ஆயிரம் பொன்வாங்கிக்கொண்டு அவளது கற்புக்கு பங்கம்வாராமல் ஓர் நாயகனை சேர்ந்தனுப்புவாளென்று எழுதியிருந்ததை எங்க ளரசகுமாரன்கண்டு காமாக்கிராந்தனாய் ஆயிரம்பொன்னை எடுத்துக்கொண்டு இராத்திரி சுமார் பத்துநாழிகைக்குச் சென்றவர் இன்னேரவரையிலுங் காணாமையால் எனக்குமகாவருத்தமுற்று தளகர்த்தகுமாரனையும் தண்டத்தலைவன் குமாரனையுமனுப்பிவைத்தேனவர்களையுங் காணாமையால் எனக்கு இனியில்லாக் கோபம்பிறந்து உடனே அத்தாசியின் வீட்டில்வந்து பார்க்கும்போது இக்காவலாளிகள்தவிர மற்றவர்களைக்காணாமையால் இவர்களுடைய முகக்குறியையுங்கண்டு இவர்களை விசாரித்தால் உண்மை விளங்குமென்று தங்கள் சமுகத்திற்குக் கொண்டுவந்தேன் இதுதானெங்களுடைய விர்த்தாந்தம் என்று மந்திரிகுமாரன்சொல்ல அதைக் கேட்ட அரசன் சகலமுந்தெரிந்துகொண்டவனாய் பிறகுவிசாரிப்போமென்று எண்ணங்கொண்டு மந்திரிகுமாரனைப் பார்த்துச் சொல்லுகிறான் ஓ மந்திரிகுமாரனே உனக்கு அம்பலத்ததிசயம் பாடத்தெரியுமா வென்றுகேட்க மந்திரிகுமாரன் பாடத்தெரியுமென்றுசொல்லவே ஆனால் பாடுமென்று அரச னுத்திரவளிக்க மந்திரிகுமாரன் பாடுங்கவி.

கவி.

காரிருள்பிளவுசோரக் கடுந்தணல்கையிலேந்தி
வாரிடைப்பொருக்கிக்கோர்த்த மலரிளங்கொங்கையினாள்
ஊரைவிட்டகலச்சென்றோ ருனனைத்தழுவிக்கொண்டாள்
ஆருடன்சொல்வேனிந்த அம்பலத்ததிசயத்தை.

வசனம்.

என்று மதிவதனனாகியமந்திரிகுமாரன் இக்கவியைச்சொல்ல சிதாநந்தமகாராஜன்கேட்டு ஆனந்தபரவசமடைந்தவனாய்அம்மந்திரிகுமாரனைப்பார்த்துச்சொல்லுகிறான் அப்பா மந்திரிகுமாரனே

நீ யாதொன்றுக்குங் கவலைப்படவேண்டாம் உன் அரசகுமாரன் எங்கிருந்தாலும் ஒரு முகூர்த்தநேரத்திற்குள் இவ்விடம்வரும்படியாகச்செய்கிறேன் நீ சிந்தனையுறாமல் அமருவாயென்று சொல்ல மந்திரிகுமாரன் அப்படியேஅமர பிறகு சிதானந்தமகாராஜன் சற்றுநேரம் யோசித்து இந் நடவடிக்கையுள்ள தாசி இவள்தானே என்று அத்தாசியைப்பார்த்து மகாகோபாக்கிராந்தனாய் கண்களில் தீப்பொரியெழ புருவம் நெற்றிமே லேரிவிழ அதட்டி அடிதாசி இதினுடைய உண்மையை ஒளியாமற்சொன்னாலாயிற்று இல்லாவிட்டாலிப்போதே உன்னைச் சிரச்சேதஞ்செய்துவிடுவேனென்று சொல்லிக்கேட்க தாசியாகிய மோகனாள்பயந்து ஓ ராஜேஸ்பரா உண்மையைச் சொல்லுகிறேனென்று சொல்லுகிறாள் இராத்திரி சுமார் பத்துநாழிகைக்கு யாரோ ஓர் அரசகுமாரன் என்னுடைய ரூபத்தை யான் படத்திலெழுதி தெருவிற்கட்டி யிருக்கும்படியான விபரங்களையுங்கண்டு காமாந்தகாரனாய் என்பேரில் மையலாகி ஆயிரம்பொன் யெனக்குக் கொடுத்தனுப்பினார் நான் தாதிகளையனுப்பி அப்பொன்னை பெற்றுக்கொண்டு அத்தாதிகளிருவரையும் அலங்கரித்து அவரிடமனுப்பினேன் அவர் இச்சூதைத் தெரிந்துகொண்டு உங்களெசமானியை வரச்சொல்லுங்களென்று அநுப்பிவிட்டார் உடனே அவர்கள் என்னிடம்வந்துசொல்ல நான் சற்றுயோசித்துப் பிறகு யான் சென்றேனப்போது அவர் என்னைக்கண்டு மகா சந்தோஷத்துடன் உல்லாசமாய் வார்த்தையாடிக்கொண்டு என்னை சங்கீதம்பாடும்படிச்சொன்னார் நான் பாடுந்தருணத்தில் யென்முகக்குறியாலும் நான் பாடும்படியானு சுரத்தாலும் உனக்கென்ன மனக்குறைவென்று கேட்டார்

நான் தங்களுடையசமுகத்தில் ஆக்கியாபித்த பாட்டின் நிபந்தனையைச் சொன்னேன் உடனே உன்மனக்குறையைத் தீர்க்கிறேனென்று அவர்தா னிக்கவியைப் பாடித்தந்தார்உடனே அக்கவியை நானெழுதிக்கொண்டு அவரைமார்பாடாக எமாற்றிவெளியில்வந்து என்காவலாளிகளாகிய இவர்களிருவரையும்விட்டு அவரைக்கொன்றுவிடும்படி உத்திரவுசெய்தேன் அப்படியேகொன்று அவ்விடத்திலேயே அடக்கம்செய்துவிட்டார்கள் விடிந்தபின்அப்பாடலையெடுத்துக்கொண்டு தங்கள் சமுகத்தில்கொண்டுவந்துவாசித்தேனிதுதான்என்னுடையஉண்மையென்று தாசியாகிய மோகனாள்சொல்ல உடனே அரசன் மகா கோபத்தோடு அடக்கஞ்

செய்திருக்கும்படியாகிய சவத்தைக்காண்பியுமென்று சேவகரை யனுப்ப அவர்க ளித்தாசியையிட்டுக்கொண்டுபோய் காண்பிக்கச் சொல்லி சவத்தை எடுத்துக்கொண்டுவந்துஇராஜசமுகத்திற்கொணர்ந்துவைத்தார்க ளுடனே இச்சவத்தைப்பார்த்தஅவனுடைய தந்தையாகிய யாதவமகாராஜன்கண்டு ஐயோமகனே என்றுவாயிலும் மார்பிலும் அடித்துக்கொண்டு சொல்லுகிறுன் அடா குமாரகா நான் இதற்குத்தானு மரவுரிதரித்து காட்டிற்குச்சென்றுபஞ்சாக்கினிமத்தியில்நின்று தவஞ்செய்து உன்னையின்றெடுத்து வளர்த்துவந்தேனடா என்கண்மணியேஎன்று அச்சிரசைதூக்கி முத்தங்கொடுத்து தனது இருநேத்திரங்களிலும்ஒத்திக்கொண்டு யாதவமகாராஜன் துக்கப்பட்டுச் சொல்லுங்

கவி.

மைந்தன்றன்சிரசைதூக்கி மலர்கண்ணிலொத்திக்கொண்டு
எந்தையைவிட்டுப்போன என்னுயிர்ப்பாலாநீயும்
சுந்தரவாய்திறந்து சொல்மொழிகேட்பதென்றே
தந்தையாம்யாதவன்றான் றயங்கியேமண்மேல்வீழ்ந்தான்.

வசனம்.

என்று இப்படி யாதவமகாராஜன் பூமியில் விழுந்து புரண்டு அழுவதைக்கண்ட மந்திரிகுமாரனுகிய மதிவதனன்சொல்லுங்

கவி.

வீழ்ந்ததோர்மன்னன்றன்னை விற்பனமுடையமந்திரி
சார்ந்தனுமதிவதனன் றாணியாள்வோனைப்பார்த்து
ஏந்தலேயுந்தன்பால னியல்புடனெழுந்துநிற்க
வேந்தனேசெய்வேனந்த விந்தையைப்பார்த்திடீரே.

வசனம்.

என்று மந்திரிகுமாரனுகிய மதிவதனன் யாதவமகாராஜனைப்பார்த்துச் சொல்லுகிறுன் ஐயா ராஜேஸ்வரா தாங்கள் யாதொன்றுக்கும் கவலைப்படவேண்டியதில்லை தங்கள்குமாரனை இப்போதே யான் எழுப்பித்தருகின்றேன் தங்கள் சிந்தனையுறவேண்டியதில்லையென்று அச்சவத்திற்குப் பன்னீரால் ஸ்நானஞ்செய்துவைக்கச்சொல்ல உடனே பன்னீரைக்கொண்டுவந்து ஸ்நானஞ்செய்துவைக்கிறபோது அவ்வூ ரரசனுகிய சிதானந்தமகாராஜன் இச்சவத்தைப்பார்த்துப் பரிதாபப்பட்டு இந்தராஜகுமாரன் உயி

ரோடிருந்தால் இவனது லட்சணத்திற்கு நமது புத்திரியைக்கொடுத்து விவாகஞ்செய்துவைப்பதோடுங்கூட நமது ராச்சியத்தையும் பட்டங்கட்டிவைக்கலாம் இனிஅதை நாம் நினைத்து என்ன பிரயோஜனம் ஆயினும் இவனைக்கொன்ற இச்சண்டாளியாகியதாசியை சிரச்சேதஞ்செய்வதுங் கூடாது கழுவில்போடவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்க அரசனுடைய நல்லநினைப்பையும் மந்திரிகுமாரனாகிய மதிவதனன் தெரிந்துக்கொண்டு சவத்தையெழுப்பும்படி சிரசையும் உடலையும் பொருந்தவைத்து உயிர்பெற்றெழும்படி மந்திரிகுமாரன் பாடுங்

கவி.

சொன்னசொற்கேளாத்தோழா துடியிடைமாதுதன்னை
மன்னவன்கழுவிலேற்ற மனந்தனிலெண்ணங்கொண்டு
தென்னிலம்புகழுமாரூர்த் திருச்செந்தூர்வேலாணை
இன்னிலம்புகழமன்னு யெழுந்திருமெழுந்திராயே.

வசனம்.

என்று மந்திரிகுமாரனாகிய மதிவதனன் இக்கவியைச்சொன்னவுடனே கேசரி தூங்கியெழுந்தவன்போ லெழுந்து இச்சபையைப்பார்த்து தனக்கு ஒன்றுந் தெரியாதபடியால் தனது மந்திரியாகிய மதிவதனனைப்பார்த்துச் சொல்லுங்

கவி.

மதிமுகஞ்சிறந்தயெந்தன் மந்திரிசெப்பக்கேளாய்
விதிவசத்தாலேயானீர் வினவியமொழியைத்தட்டி
சதிசெய்இத்தாசிவீட்டில் தனித்துயான்சென்றபோதத்
ததியினிலென்னைக்காண தணிகையரிருவர்வந்தார்.

இதுவுமது.

வந்தபாவையரோயுங்கள் வஞ்சியைவிட்டுநீரென்
சிந்தையுமகிழத்தோன்றுஞ் சேயினைத்தாதிமாரே
தந்திரமாயத்தாலுஞ் சார்கிலேன்பதுமையோத்த
சுந்திரமாதுதன்னைச் சுருக்குடன்வரச்செய்யென்றேன்.

வசனம்.

என்று இக்கவியைச் சொன்னவுடனே தாதிகள்கேட்டு அவளிடம்போய் இச்சங்கதியைச் சொல்ல உடனே அந்தாசியானவள் வந்து என்னைக்கண்டு சரசவார்த்தைகளெல்லாமாட அவள்

முகக்குறியை யான் கண்டு நீ விசனமுற்றிருப்பதற்குக் காரணம் யாதோ அதை வினவென்று யான் கேட்க உடனே அவள் இச் சபையில் அம்பலத்ததிசயம் பாடுகிறேனென்று சொன்னதும் அரசன் எட்டுதினத்திற்குள் நீ வந்து பாடாவிட்டால் சிரச்சேதம் செய்துவிடுவேனென்று ஆக்ஞாபித்ததையும் சொல்லி பொழுது விடிந்தால் என் சிரசும் போய்விடுமென்று சொன்னாள் அதற்கு யான் மனதிரங்கி அக்கவியைப் பாடிக்கொடுத்தேன் உடனேவெளியில்வந்தாள் பிறகு இரண்டு காவற்காரர்கள் என்னிடம்வந்து நடத்திய

க வி.

அலத்தல்தகையை வுளத்திற்பொருந்தி
அணுகிவந்த கயவர்கள்
நிலத்தில்தள்ளி குருத்தலோடு
நீண்டசிகையைப் பிடித்துமே
பலத்தாற்குத்தி முறித்துநெரித்து
புண்ணீர்சொரிய வெண்டலை
தலத்தில்விழவே வாளைக்கொண்டு
தறித்தசெய்கை யறிவனே.

வசனம்.

என்று அரசகுமாரன் தன்னுடைய விர்த்தாந்தங்களைச்சொல்லிப் பிறகு தண்டத்தலைவன் குமாரனாகிய ஜெயசூரனைப்பார்த்து நீ இவ்விடம் வரவேண்டிய காரண மென்னவென்றுகேட்கஜெயசூரன் சொல்லுகிறான் ஐயா தங்களைக்காணமையால் மந்திரிகுமாரன் என்னையழைத்துஅப்பா நம்தரசனைக்காணேம் நீசீக்கிரம் சென்று அழைத்துவாவென்று சொல்ல அப்படியே நான் வந்து எங்குந் தேடிக்காணமையால் இச்சபையில் தங்களைவந்துதேடிப் பார்க்கும்போது இவ்வரசன் என்னைக்கண்டு நீ யாரென்றுகேட்க அப்போது யான் என்னுடைய விர்த்தாந்தங்களைச்சொல்ல பிறகு உனக்கு அம்பலத்ததிசயம் பாடத் தெரியுமாவென்று கேட்க நான் பாடத்தெரியுமென்று பாடிய

வெண்பா.

கஞ்சமலர்வதனக் காரிகையின் றன்கணவன்
பஞ்சணையிற்கூடிப் படுத்திருக்க—வஞ்சனையாய்ச்
சென்றுமுடவனையுஞ் சேர்த்தணைந்தாளென்றுரைத்தேன்
அன்றடைத்து விட்டா னவன்.

வசனம்.

என்று தண்டத்தலைவன் குமாரனாகிய ஜெயசூரன் சொல்லவே அரசகுமாரன் கேட்டு சந்தோஷப்பட்டு தளகர்த்தன்குமாரனைப்பார்த்து நீ இவ்விடம் வரவேண்டியகாரணம் யாதென்று கேட்க தளகர்த்தன் குமாரனாகிய மதிகுணன் சொல்லுகிறான் தங்களைத் தேடிவந்தேன் அம்பலத்ததிசயம் பாடச்சொல்லி யான் பாடிய

கவி.

நடைதனை அன்னங்கண்டு நாணமுற்றேங்கும்வாழைத்
துடைதனையுடையமின்னாள் தோழனைத் தூங்கவைத்து
தடைபடுங்கபாடம்நீக்கித் தழுவினள்முடவனையென்றேன்
அடைவுடனரசனென்னை யடைத்தனன்சிறையிலென்றான்.

வசனம்.

என்று தளகர்த்தன் குமாரனாகிய மதிகுணன் சொல்ல அதைக்கேட்ட அரசகுமாரன் சந்தோஷப்பட்டு பின்பு மந்திரிகுமாரனாகிய மதிவதனனைப்பார்த்து நீ இவ்விடம்வந்தகாரணமியாதென்று கேட்க அப்போது மந்திரிகுமாரனாகிய மதிவதனன் சொல்லுகிறான் ஓ மித்திரா யானோ நெடுநேரவரையில் உன்னைக் காணாமையால் ஜெயசூரனை அனுப்பி உன்னை அழைத்துவரச் சொன்னேன் அப்படியே அவன் உன்னைத் தேடிவந்தான் அப்படி உன்னைத் தேடிவந்த அவனையும் நெடுநேரவரையிற் காணாமல் மதிகுணனை யனுப்பினேன் அவனும் வரவில்லை பிறகு நானே புறப்பட்டு இத்தாசிவீட்டிற்போய்த் தேடி அங்கு உன்னைக் காணாமல் பிறகு இவ்விடம்வந்து அரசனைக் கண்டேன் அவர் என்னை அம்பலத்ததிசயம் பாடத்தெரியுமாவென்று கேட்டார் நான் பாடத்தெரியுமென்று பாடிய

கவி,

கச்சைகொண்டிருகவிம்மும் கனஸ்தனமுடையமின்னாள்
இச்சைகொண்டனன்மீது இல்லரம்விட்டுநீங்கி
அச்சமில்லாமற்கூடி அணைந்தனள்முடவனையென்றேன்
இட்சணமருகிலென்னை யிருமென்றாரிருந்தேன்மன்னா.

வசனம்.

என்று மந்திரிகுமாரனுகிய மதிவதனன்சொல்ல அதைக்கேட்ட அரசகுமாரன் மகாசந்தோஷப்பட்டு ஒருவர்க்கொருவர் கட்டித்தழுவிப் பிறகு தனதுபிதாவைக்கண்டு அவருடைய திருவடியைவணங்க அன்னவரும் தனதுகுமாரர்களையும் மற்றுமூவர்களையும் வாரித்தழுவி முத்தமிட்டு மகா சந்தோஷித்தர்களாயிருக்க பின்பு அவ்விடத்தில் வந்திருந்த ஐம்பைத்தைந்து தேசத்தரசர்களும் இந்த ஆச்சரியத்தைக்கண்டு அடங்கா மகிட்சியைக்கொண்டு இருநேத்திரங்களிலும் ஆனந்தபாஷ்பம்பெருகி அருவிபோலோட இன்னுமென்ன நடக்கின்றது பார்ப்போமென்று யிருக்குந்தருவாயில் சிதாநந்தமகாராஜன் இந்த மோகனுளென்னுந்தாசியை கழுவில்போடும்படியாய் ஆக்யாபித்து இந்த காவலர்களிருவரையும் தண்டித்து பிறகு தனது இளையமனையாளாகிய சுந்தரவடிவாளையும் குஷ்டரோகியையும் தனது சபைக்குக் கொண்டுவரும்படியாய் காவலர்களுக்கு ஆக்யாபித்தான் உடனே அக்காவலர்கள் சென்று இராஜனது இளையமனையாளையும் குஷ்டரோகியையும் கொண்டுவந்து அரசனுடையசமுகத்தில் விட்டார்கள் அப்போது சிதாநந்தமகாராஜன் இவர்களிருவரையும் பார்த்தவுடன் மகாகோபங்கொண்டு சொல்லுகிறுன் அடி குலபாதகி அடி சண்டாளி நீயோ இராஜஸ்திரீயாயிருந்தும் கேவலம் இந்தக் குஷ்டரோகியைச் சேர்வதற்காக என்னிடத்தில் எவ்வளவு பாசாங்குபண்ணி கபடமாகத்தானே இந்தக் குஷ்டரோகியினிடம் போய்ச் சேர்ந்தாயல்லவா ஆகையால் அவனையும் அவனை அன்போடு கூடிக்கலந்த உன்னையும் சித்திரவதைசெய்ய உத்தேசித்திருக்கின்றேன் அப்படி நான் எண்ணங்கொண்டிருந்தாலும் இச்சபையில் அனேக அரசர்கள் சூழ்ந்திருக்கின்றமையால் அவர்களுடைய அபிப்பிராயமுங் கேட்போமென்று உத்தேசித்து சபையாரைப்பார்த்துச் சொல்லுகிறுன் ஓ ராஜாக்களே இதோ என்னெதிரில் நிற்கின்ற பெண்ணுனவள் எனது இளையமனையாள் இச்சிறுவர்களாகிய நால்வரும் பாடிய அம்பலத் தநிசயத்திலுடைய நடவடிக்கையைப்போல் நடத்தியவளிவளே ஆகையால் இவளையும் இவளைச்சேர்ந்த அனுபவித்த இந்த குஷ்டரோகியையுமென்ன செய்யலாமென்று சபையோர்களைக்கேட்க அச்சபையோரெல்லாம் ஆலோசித்துச் சொல்லுகிறுர்கள் ஐயா ராஜேஸ்வரா இவர்

களிருவரையும் தங்கள் கரத்தாலேயே சம்மாரஞ்செய்து விடுங்களென்று சொல்ல உடனே அரசன் மகா கோபாவேஷத்துடன அவர்களிருவரையும் அந்தச் சபையிலேயே கொண்டுவந்து ஜதையாக நிறுத்தி தனது மந்திரவாளால் இரண்டு சிரசும் பூமியில் விழும்படி வெட்டித்தள்ளினான் அப்படி அரசன் வெட்டினவுடனே இரண்டுசிரசும் பூமியில் விழுந்துவிட்டது விழுந்த சற்றுநேரத்திற்குள் சபையி லிருந்தவர்களெல்லாம் திடுக்கிடும்படி ஓர் ஆச்சரியமானது தோன்றிற்று.

அதாவது,

க வி.

கல்சிலைராமன் காலடிபடவே
காரிழை யுருவெனுங்கதைபோல்
தொல்முனிசாபம் நீங்கியேமுடவன்
தோன்றினன் விமலவனுக
வல்லியங்கொடியாள் வந்தனள்பழைய
வடிவமுந் தோன்றிடநின்று
எல்லையில்யாவருங் காணவேயிருவர்
யேகினர் பொன்னுலகன்றே.

வசனம்.

என்று சிதாநந்தமகாராஜன் இவர்களிருவரையும் வெட்டினவுடனே கௌதமமகாரிஷியினுடையசாபத்தைப்பெற்று சிலைரூபமாயிருந்த அகலிகையின்மேல் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியினுடைய திருவடி பாததூளியானது பட்டவுடனே சிலைரூபமாகயிருந்தது மாறி பழயபடி பெண்ணுருவமாகி எப்படி தோன்றினளோ அதுபோலவே இவர்களிருவரும் மானிடசரீரத்தைவிட்டு காந்தர்வசரீரத்தைப்பெற்று இவர்கள் சிதாநந்தமகாராஜனைப்பார்த்து சொல்லுகிறார்கள் ஓ சிதாநந்தமகாராஜனே யாங்களோ காந்தர்வாள் இப்பெண்ணோ எனது மனையாள் யாங்கள் ஓர்காரணார்த்தமாக பூலோகத்திற்குவந்தோ மப்படிவந்தபோது ஓர்மகரிஷியால எங்களுக்கு கொடியசாபம்நேரிட்டது அச்சாபமானது இன்றுஉம்மால் தீர்ந்து நாங்கள் எங்களுடைய காந்தர்வசரீரத்தைப் பெற்றோம் ஆகையால் நீ இப்பூலோகத்தின்கண் பல்லாண்டு பல்லாண்டாய் வாழக்கடவாயென்று ஆசீர்வாதஞ்செய்து இவர்களிருவருந் தங்களுடைய பொன்னுலகமடைந்து தங்களினத்தாருடன் கூடிக்

கலந்து அதிகமகிழ்ச்சியுடனிருந்தார்கள் இதுநிற்க மேற்சொல்லிய சிதானந்தமகாராஜனும் அச்சபையிலுள்ள ஐம்பத்தைந்து தேசத்தரசர்களும் இந்த ஆச்சரியத்தைக்கண்டு மகா சந்தோஷப்பட்டவர்களாய் அதிக மகிழ்வடைந்திருந்தார்கள்.

பின்பு சிதானந்தமகாராஜன் தனது மூத்தமனையாளுக்குஜெனித்திருந்த கலாவதியென்கின்றபெண்ணை கேசரிக்குக்கொடுத்து மணம்புரிவித்து தனது ராச்சியத்தையு மவனுக்கேபட்டங்கட்டிவைத்து பின்பு அவ்விடம் வந்திருந்த அரசர்களுக்கெல்லாம்தக்கபடி மரியாதைசெய்து அவாளவாள் நகரத்திற்கு அனுப்பிவைக்க அவாளுமப்படியே தங்கள்தங்கள்நகரம்போய்ச் சுகமாகவாழ்ந்து வந்தார்கள் பின்பு யாதவமகாராஜன் சிலநாள் அவ்விடமிருந்து தனது புத்திரனையழைத்துச் சொல்லுகிறார் அப்பா கேசரி நீயும் உனது பத்தினியுமாக நமது ராச்சியத்திற்குவந்துசிலநாளிருந்து விட்டுப் பின்பு இவ்விடம் வரலாம் வாவென்றழைக்க அப்போது கேசரியும் அப்படியேயாகட்டுமென்று ரதகெஜதுரகபதாதிசைன்னியங்களுடன் புறப்பட்டுப்போய் அவ்விடம் சிலநா ளிருந்துப் பின்பு பப்பரதேசம்வந்து தானும் தனது பத்தினியுமாக நெடுங்காலம் சுபமாக வாழ்ந்துவந்தார்கள்.

வாழி-விருத்தம்.

அரியயரனயனும்வாழி அமரருமுனிவர்வாழி
கரிமுகன்கந்தன்வாழி கலைமகள்திருவுவாழி
திரிபுரத்துமையாள்வாழி சிறந்தநற்கவிஞர்வாழி
நெறியுளமன்னர்வாழி நீடுலகத்தோர்வாழி.

சுந்தராங்கியின்

சாபவிமோசனச் சரித்திரம்.

முற்றுப்பெற்றது.

---

நாரதரால்,

# ஸ்ரீபாகவதம் உற்பத்தி.

ஸ்ரீவேதவியாச முனீஸ்வரர் ஒன்றோடொன்று கலந்து உபயோகமில்லாம லிருந்த வேதங்களை வெவ்வேறாகப் பிரித்துஅவர் அதின்பொருளைச் சகல சிவாத்மாக்களும் அறிந்து கடைத்தேற வேண்டி புராணங்களாகவும் இதிகாசங்களாகவும் இரண்டுவகையாகவெளியிட்டுத் தம்முடைய வர்ணாசிரமங்களுக்குயோக்கியமான நித்தியநைமித்திய கருமங்களினாலே ஸ்ரீபகவானை ஆராதனம் செய்து பரிபூரணமாகவிருந்த போதைக்கும் உலகத்துக்குத் தாம் செய்யவேண்டிய உபகாரம் இன்னமுஞ்சிலதுகுறையுண்டாகஇருக்குதென்றும், தாமேதெரிந்துக்கொண்டு அதின் விபரங்காணமற் சிந்தித்துக்கொண்டிருந்த சமயத்தில் பிரமலோகத்தி லிருந்து நாரதமுனீஸ்வரர் வந்துஇவரைப்பார்த்து ஓ-வியாசமுனியே! உம்முடையமனதிலே என்னமோ சிந்தித்துக்கொண்டிருக்கின்றீர் அதைச்சொல்லு மென்றுகேழ்க்க,வேதவியாசர் நாரதமுனீஸ்வரரைப் பார்த்துச்சொன்னது ஓ-நாரதமுனீஸ்வரரே! நான் இதுவரைக்கும்நடத்துக்கொள்ளவேண்டிய வர்ணாசிரமதருமங்களை நடத்தினேன், வேதங்களைப்பிரித்து அவற்றின்பொருள்களையும் வெளியிட்டேன், பிராகிருததர்மங்களைப் பிரகாசப் பண்ணின தோஷபரிகார நிமித்தியமாகப் பாரதத்தினுடைய முடிவிலே ஹரிவம்சத்தினாலே ஸ்ரீமந்நாராயணருடைய திவ்யகுணதிசயங்களையும் வெளியிட்டு லோகோபகாரத்தையுங் கற்பித்தேன், நான் இப்படியெல்லாஞ் செய்திருந்தும் இன்னமும் லோகோபகாரஞ் செய்யவேண்டிய துண்டென்றுதோற்றியும் அஃதின்னதென்று தெரியாமலிருக்கையினாலே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன், அதைதேவரீரறிந்து இன்னதென்று சொல்லவேண்டுமென்று வினவியதற்கு நாரதர் சொல்லுகின்றார்.

ஓ-வியாசமுனியே! நீர் செய்ததெல்லாம் இயல்பாயினும் பிராகிருததர்மங்களையும் பிராகிருதரான ராஜாக்களையும் மிகவும் விஸ்தாரமாகச் சொன்னீர், மோட்சதருமமு முத்திப்பிரதனை

பரமாத்மாவையும் மோட்சத்தையே புருஷார்த்தமாகக் கோரியிருக்கிற ஸ்ரீபாகவதாளுடைய மகிமையுமிதமாகச்சொன்னீர் அதுகளைப்பார்த்த ஜனங்களுக்கு விபரீதக்கியானம் வருகிறதேயல்லாமல் தத்வக்கியானம் பிறக்கமாட்டாது. ஆகையினலே இதுவே உம்முடைய மனதுகுறைவுக்கு ஏதுவானதென்றுசொல்லி இனி மேற்செய்யவேண்டிய தவத்தைச் சொல்லுகிறேனென்று ஸ்ரீமந்நாராயணரிடத்தில் தன்னுடைய பிதாவான பிரம்மாவுக்கு உபதேசமாகவந்த ஸ்ரீபாகவதகதையைத் தான் பிரம்மாவினிடத்திலிருந்து தெரிந்துக்கொண்டபடி வியாசருக்குச் சங்கிரகமாக வுபதேசஞ் செய்தார். அந்தவியாசரும் நாரதர் சத்தியலோகத்துக்குப் போன பிற்பாடு சரஸ்வதிநதி தீர்த்தத்தில் ஸ்நானமுதலான நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு நாரதர் உபதேசித்த பிரமதத்வத்தை யோகத்தியானத்தினலே சாட்சாத்கரித்து விஸ்தாரமாக ஸ்ரீபாகவதபுராணத்தைச் செய்யத் தொடங்கினர். தொடங்குங் காலத்தில் இந்தப் பாகவதபுராணத்திற் சொல்லப்படுகிற பிரம்ம சொரூபத்தையும் பிரம்மத்தினுடைய குணங்களையும் முக்தரான சீவாத்மாக்களையும் செகத்தினுடைய சிருஷ்டி முதலானதுகளையும் பிரமஞ்செய்யுங் காலத்தில் அந்தப்பிரம்மம் பிரிவில்லாத காரணமாகியும் பிரிவுண்டான காரணமாகியு மிருக்கு மிருப்பையும் சங்கிரகமாகக் காண்பித்து பிரமலட்சணமாகிய சென்மாதிகாரணத்துவத்தைச் செகத்துக்குச் சொல்லுகிற உபநிஷத்தைப் பிரகாசம்பண்ணுகிற பிரமசூத்திரத்தாற் றொடங்கிக் காயத்திரி பதங்களுடனே கலந்தகிரந்தபதங்களால் சேர்மானஞ்செய்து பிரமத்தினுடைய சொரூபத்தைத் தெளியவுரைக்கிற சத்தியபதத்தால்முடிவைக்காண்பித்து தீமகியென்கிற காயத்திரிபதத்தால் முடித்தபடியினலே பிரமம் செகத்துக்குக் காரணமென்றும், தன்னை முத்தர்களடைகிறகாலத்திலு மவர்களிற் கலந்திருந்துந் தான் வேருகவிருந்து அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்குமென்றும் இப்படிக்கெல்லா முதற்சுலோகத்திலே சொல்லியிருக்கையால் இந்தப் பாகவதம் விரோதமான பொருள்களைச் சொல்லாது இந்தமுதற் சுலோகத்திலே சொல்லியிருக்கிற பொருளென்னவென்றுல்? சென்மாதியாகிய இந்த வுலகத்தினுடைய சிருஷ்டியும் பாலனமும் சங்காரமும் எவனுடைய செயலோ? இதுகளைச் சொல்லுகின்ற காரணவாக்கியங்கள் மற்றொருவரிடத்திலே பொருந்தாமல் எவ

னிடத்திலே யியல்பாகப்பொருந்தி விளங்குகின்றனவோ வுலகங்களுடைய சிருஷ்டிமுதலான காரியங்களைத் தலைக்கூடும்படி சாதகமாகிய அறிவை யுடைத்தானவனெவனோ வவனுக்கு உயர்ந்தவரும் சரியானவரும் மற்றொருவரில்லையோ? அவன் ஆதிகவியான பிரம்மாவுக்கு இந்தவுலகசிருஷ்டிக்கு பழையமார்க்கமான வேதத்தை அறியும்படி தன்மனதினாலே தானே நினைத்தானோ? எவனை எக்காலமுமிந்த மாய்கைக்குள்வெளிப்பட்ட நித்தியசூரிகளு மிவ்வளவென்று முழுவது மறியமாட்டாம லிருந்ததை எவன் அதுகளில் புகுந்து சேர்ப்பித்தானோ? பிரிவில்லாத காரணமாகிய எவனிடத்தில் சத்துவமுதலான மூன்று குணங்களையுடைய கருமங்கள் உலகத்திற் சத்தியமாகவிளங்குகின்றனவோ? இப்படி சூட்சுமஸ்தூளமாகிய சேதனு சேதனங்களிலே யுட்புகுந்து அவையும் அவற்றின் கருமங்களும் அவற்றின் கருத்தாவுமாகியிருந்தாலும் அதுகளிலுண்டான தோஷங்களைத் தன்னிடத்திலேயெப்போதும் சேரவொட்டாம லிருக்கிறமகிமையை உடைத்தானவனெவனோ அந்தப் பரமசத்திய மூர்த்தியை தியானம் பண்ணுகிறேனென்று முதற்சுலோகத்தால் வணங்கினர். இப்படி தம்மாலே செய்யப்படுகிற பாகவதபுராணத்தை மற்ற இராசததாமச தருமங்களைச் சொல்லுகிற புராணங்களோடே சரியென்றும் அதுகளில் சொல்லப்படுகிற அருத்தங்களிந்த புராணத்திற்சொல்லுகிற அருத்தங்களைப்போலே எதார்த்தமான தருமமென்று நினைக்க வேண்டியதில்லை ஆகையால் மோக்ஷமாகிய பதத்தைக் கோரினவர்களுக்கு இந்தப் பாகவதமே முக்கியமென்று இரண்டாவது சுலோகத்தால் வெளியிட்டார்.

அதெப்படியென்றால், இந்தப்புராணத்திற்சொல்லுகிற தருமங்கள் மற்றவிடத்திற் சொல்லுகிற தருமங்களைப்போல் சொர்க்காதி போகங்களைக் கொடுத்து சிலகாலம் அவ்விடத்தில் புருஷனுக்கு ஆசையை உண்டுபண்ணி அவனை அவனுமறியாமல் தலைகிழாகத் தள்ளுகிற வஞ்சனைவிட்ட பரமதரும மாகையினாலேயும், இதில் வர்ணிக்கப்படுகிற தேவன் தன்னையறிந்து தன்னைஅடுத்த பேருக்கு தாபத்திரையங்களையும் ஒருத்து ஒருகாலத்திலும் எற்றக்குறைச்சலும் அழிவுமில்லாம லிருக்கிற ஆனந்த சமுத்திரமாகிய நிரதிசயஇன்பத்தைத் தன்பக்தருக்குக்கொடுக்கும் புருஷோத்தமனென்றும், இந்தப் புராண விஷயங்களைச்சொல்லவும் படிக்

கவும் யோக்கியரானவரெவரென்றால் பரதேவதையினுடைய மகிமையைச் சகிக்கமாட்டாமையாகிற அசூயையுமாச்சரியமும்விட்ட உத்தம புருஷரென்றும், இந்தப் புராணத்தை உபதேசித்தவர் ஆதிகர்த்தாவான ஸ்ரீமந்நாராயண முனியென்றும், இன்னம் இந்தப்புராணத்தைக் கேட்கவேண்டுமென்று இச்சித்த மகாபுண்ணியசாலிகளுக்கு இந்தகதைகளைக் கேட்கையிற்றானேசர்வசுதந்திரரான பரமாத்துமா அவர்களுடைய நெஞ்சிற்புகுந்து அதிசஞ்சலமாகிய அவர்களுடைய மனதைத் தன்னிடத்திற் சேர்த்துஇடைவிடாமல் ஒருமைப்பண்ணுவதுபோல மற்றப்புராணங்களிலுண்டாகாதென்றுசொல்லி மூன்றுஞ்சுலோகத்தால் வேதமாகிறகர்ப்பகவிருட்சத்திற் பழுத்தபழமானது பலித்து பிரம்மாவும் நாரதரும் தாமுமாகிற துளிரும் பூவுமாய்த்தழைத்த கிளைகளில் தங்கிமெள்ளபூமியிலிருந்து சுகமுனியாகிற கிளிமுகத்தால் கோதப்பட்டு மோக்ஷமாகிற மதுரரசத்தை பெருகவிடுகிற தோலும் கொட்டையும் நாருமில்லாத பாகவதமாகிற பழத்தைக்காட்டி ஓபிரமாசானுபவம் பண்ணவல்லலவர்களே! நீங்கள் இந்த வுலகத்திலே தானே அந்த ஆனந்தத்தை அடிக்கடி அனுபவம்பண்ணுங்கள் இந்த ஆனந்தானுபவம் உங்களுக்கு இவிடத்தில் மாத்திரமல்ல மோட்சதிசையிலும் இதுவேபலனுகப் பெறுவீரென்றுசொல்லி இந்தப்புராணத்தைப்படித்து இதனுடைய அருத்தத்தைஅனுபவிக்கும் ஜனங்களினுடைய சுகிர்தத்தைத்தாமே சந்தோஷித்து ஆச்சரியப்பட்டுக்கொண்டார். இப்படி மூன்றுசுலோகத்தால் பாகவதத்திற்சொல்லுகிற வயிலட்சணியத்தைக் காண்பித்துத் தாம் செய்தபுராணத்தைத் தம்முடைய வேதபாராயணமாகிற தபோகர்ப்பத்தில்பிறந்து தமக்குபுத்திரனுகிய சுகமுனிக்கு அருளிச்செய்தார். அவரும் பிறவிமுதல்பிரமநிஷ்டரானாலும் தம்முடையமனதில் பிரத்தியட்சமாக அனுபவித்துவருகிற வாசுதேவனுடைய மகிமையைச் சொல்லுகிற புராணரத்னமாகையால் இந்தப் புராணத்தைப் படித்து மனதில்தரித்து இதைக்கேட்க மற்றொருயோக்கியரில்லாமையால் தம்முடைய ஆசிரமத்திற்கரிதாகி மவுனத்தைத் தரித்து ஒரிடத்திலும் ஒருபசுகறக்கிற நேரமுமிராமல் சகலமும் வாசுதேவ சொரூபமென்று பிரத்தியட்சமாய்த்தெரிந்துகொண்டு இந்த வுலகத்தில் சஞ்சரிக்கிறகாலத்தில் பிரமசாபத்தால் தன்காலந்தெரிந்து வயிராக்கியம்பிறந்து கங்கையில் பிரா

யோபதேசம்பண்ணி பரகதிக்கு வழிகாண்பிக்கும் பரமபாகவதரைக் காணுமல் தவித்திருந்த பரிக்ஷித்து மகாராசாவுக்கு உபதேசித்திருக்கிற சமயத்தில் நாரதர்முதலான சகல முனிவர்களும் அந்தக்காலமறிந்து தங்களிருதயத்திலிருக்கிற கதாதரனை சுவாமியால் சகல தீர்த்தங்களையும் பரிசுத்தம் பண்ணவேண்டி தீர்த்தயாத்திரை நிமித்தியமாய் எழுந்தருளி இந்த உபதேசங் கேட்டுவுவந்தார்கள். இந்தப் புராணத்தை ஸ்ரீவேதவியாசமுனீஸ்வரரிடத்தில் படித்து வியாசரனுக்கிரகத்தினுல் சகலமான இதிகாச புராணங்களையும் தருமங்களையும் சகலமான, பிராணிகளுக்கும் தெளியவுரைத்து லோகரட்சணம் பண்ணிவருகிற சூதபுராணிகரிடத்தில் சவுனகர்முதலான ரிஷிகள் தெரிந்துக் கொண்ட பாகவதத்தைத் தமிழ்வசனமாக நிருமிக்கப்பட்டது.(மற்ற சரித்திரம் முழுமையும்பாகவதபுராணத்திற் பார்க்கவும்.)

## நாரதரால் ஸ்ரீ பாகவதம் உற்பத்தி

முற்றிற்று.

---

வியாசபகவானுக்கு நாரதர் உபதேசித்த

# ஹரிப்பிரபாவம்.

———(*)———

கலி-விருத்தம்.

சீரதர்மங்க டன்னிலுஞ்சிதரன்
சாரக்கீர்த்தன மேதக்கதாமென
வீரவேதமு னிக்குமிளிர்த்தியாழ்
நாரதமுனி நன்குபதேசிப்பாம்.

ஆதியில் ஸ்ரீ பாகவதபுராண ஆரம்பத்திலே சகலபிராணிகளுடைய சுகத்தைக்குறித்து வியசனத்தைஅடைந்து சிந்தித்திருக்கிற வியாசமுனியினுடைய ஆசிரமத்திலே நாரத முனீஸ்வரர் எழுந்தருளி சர்வ தருமங்களைப் பார்க்கிலும் ஹரிகீர்த்தனத்தினுடைய கௌரவம் வியாசருடைய சித்தப்பிரசாதத்தின்பொருட்டு நாரதராலே உபதேசிக்கப்படுகின்றது.

அதிகீர்த்திசாலியான நாரதமுனீஸ்வரரும் தமக்கு உபசாரங்கள் பண்ணின வியாசமுனீஸ்வரர் சுகாசனமாக தம்முடைய

சமீபத்திலிருந்த பின்பு அவரைப்பார்த்து தம்முடைய கையிலி ருக்கிற வீணையினாலே கானஞ்செய்துக்கொண்டு புன்சிரிப்புடனே மந்த ஆசத்துடனே கூடினவர்போல ஒருவார்த்தை சொல்லுகி ருர். வாரீர் பராசர்குமாரரே! மஹானுபாவரே! உம்முடைய சரீ ரத்தில் பிரகாசிக்கிற ஜீவாத்மாவினிடத்தில் இருக்கிற அந்தரியா மியான பரமாத்துமாவினுடைய அனுபவத்தினாலே அவனுக்குச் சரீரமாகிய ஜீவாத்மாவுக்கு ஆனந்தமுண்டாயிருக்கிறதா? மனதி னாலே கற்பிதமான சாலவிந்திரிய விசிஷ்டமாகிய தேகத்துக்குச் சகல தருமவிரத அனுஷ்டானங்களாலே சந்தோஷமிருக்கிறதா? ஆச்சரியகரமாகியும், மகத்தாயுமிருக்கிறவஸ்துவை அறியவேண்டு மென்று நினைத்திருந்தீரே அதையறிந்தீரா? தருமார்த்த காம மோக்ஷங்களுக்கும் சாதகமாகிய தருமங்களினாலே மிகுதியாகிய பாரதமென்னும் இதிகாசத்தைச் செய்யவேண்டுமென்று நினைத் திருந்தீரே, அதைச் செய்தீரா? ஆதிமத்தியந்த ரகிதமான பரப் பிரம்மத்தை அறியவேண்டுமென்று நினைத்திருந்தபடி நிச்சயமா கத் தெரிந்துகொண்டீரா? இப்படியிருந்தாலும் ஒரு பிரயோச னத்தைக்குறித்து வெகுபிரயாசஞ்செய்தவன் அந்தப் பலனையிழ ந்தால் எப்படியோ, அப்படி உம்மைக்குறித்து நீரே சுகப்படுகிறீ ரே யென்று சொன்ன நாரதமுனீந்திரரைப்பார்த்து வியாசமுனி வர் சொல்லுகிருர். என்னிடத்தில் நீர் சொன்னபடி நடத்தையு ள்ளதுதான் சத்தியமாகவேசொன்னீர். இப்படியெல்லாம் உபகா ரஞ்செய்திருந்தேனானும் என்னுடைய ஆத்துமா சந்தோஷம் அடையவில்லை. அதன் காரணத்தையும் அறியவில்லை. ஆகையால் பிரமதேவனுடைய சரீரத்தில்ஜெனித்த அளவிடப்படாத கியான நிதியான தேவரீரைக் கேட்கிறேன். இப்படிச் ஜெனித்தவர்களில் ஆதிபுருஷனாகியும் உயர்ச்சி தாழ்ச்சி அபகிருஷங்களான சகல வஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகியும் பிரகிருதியை சரீரமாக கிரகித் தும் மனதிலேதானே இந்தவுலகங்களைக் கற்பித்தும், ரட்சித்தும், சங்கரித்தும், அந்தப் பிரகிருதியினுடைய சங்கந் தவிர்ந்திருக்கிற சதுர்முகனுடைய சமீபத்தில் வசித்து அவருடைய தயவினாலே பரமசூட்சுமமான சகலதருமங்களையுந் தெரிந்த தேவரீர் ஆதித் தியனைப்போல மூன்றுலோகமும் சஞ்சரித்து ஜீவாத்மசாட்சியா ன பிராணவாயுவைப்போல யோகப்பிரவாசத்தினாலே சகலஜீவாத் மாக்களுடைய மனதிலுஞ் சஞ்சரிக்கிற சக்தியையுடைத்தானவ

ராகையால் கேட்கிறேன். பலத்தை இச்சியாம லுரியதருமங்க ளாலே, அணுவுக்கும் அணுவாய், மகத்துக்கு மகத்தாகிய பரமாத்மாவினிடத்திலும், நியம அத்தியயனுதிகளான விரதங்களாலே வேதங்களிலும் நிஷ்டைபொருந்தின எனக்கு, உண்டான குறைவைச் சொல்ல வேண்டுமென்று விநயத்துடனே விக்ஞாபனம் பண்ணின வியாசரைப்பார்த்து வேதமுனியான நாரதமுனிசொல்லுகிறார். ஓ வியாசமுனியே! ஷட்குண பரிபூரணனான பரமபுருஷனுடைய அகளங்கமான கீர்த்தியை நீர் பரிபூரணமாகச்சொல்லவில்லை. அந்தகாரணத்தினாலே உம்மிட ஆத்மாவுக்குச் சந்தோஷப் பிறக்கவில்லையென்று நினைக்கிறேன். மிகுதியாக பரமாத்மாவினுடைய குணங்களை நீர்ஸ்துதிபண்ணாமற் போனதினாலேமுன் சொன்ன உம்முடைய பரிபூரணக்கியானங்களும் குறைந்தன வாகும். முனிசிரேஷ்டரே! தருமமுதலான புருஷார்த்தங்களும், அதன் சாதனங்களும், விஸ்தாரமாக எப்படி வர்ணிக்கப்பட்டனவோ, அப்படி சர்வத்திர பரிபூரணனான வாசுதேவனுடையமகிமையை விஸ்தாரமாக வர்ணிக்கப்படவில்லை. யாதொரு சொற்கள் மிகுதியான ஆச்சரியங்களுக்கு இடமாகியிருந்தாலும், உலகங்களுக்கெல்லாம் பாவநமான ஸ்ரீஹரியினுடைய புகழை ஸ்துதிசெய்யவில்லையோ அந்தச்சொல்லை மனதிலே பரமாத்மானுபவம்பண்ணுகிற ஜனங்கள் காகங்களிறங்குந் துறையென்று சொல்லுவார்கள். அதேதென்றால் அதிமனோகரமான பிரமத்திளிடத்தில் விகரிக்கிற பரம அம்சமுனிவர்களாகிற ராஜஹம்சங்கள் அவ்விடத்தில் விகரிக்கமாட்டா, ஆகையால் யாதொருபிரபந்தத்தில் சுலோகப்பிரதி சுலோகங்களும் இலக்கணப்பழுதான சொற்களா யிருந்தாலும், அனந்தனுடைய கீர்த்திகளுக்குக் குறியாகிய நாமங்களை ஒருவர் சொல்லுகிறகாலத்தில் தாங்கள் கேட்டும், கேட்கிற ஜனங்களிருந்த காலத்தில் தாங்கள் தியானஞ்செய்தும், மற்றொருவருமில்லாதகாலத்தில் தாங்களே படித்தும், சாதுஜனங்கள் சுகத்தையடைகிறார்களோ? சகல ஜனங்களையும் பாவனஞ்செய்கிற அந்தப் பிரபந்தமே சிலாக்கியமானது பலாபேக்ஷையில்லாமற்செய்த கருமங்களு மச்சுதனிடத்தில் பக்தியில்லாமற் போனால் பிரகாசிக்கமாட்டா, பிரகிருதி சம்பந்தரகிதமான ஜீவஸ்வரூப சாக்ஷாத்காரமும் ஜீவசரீரகனானபிரமோபாசனத்துக்குஅங்கமாகாமற்போனால்அது மிகவும் பலமில்லாததேயாம். இப்படி தன்னை யனுஷ்டிக்குங் கா

லத்திலும் தான் பலன்களைக் கொடுக்குங்காலத்திலும் வெகுசிரமத்தைக் கொடுக்கிற கருமங்கள் அச்சுதனிடத்தில் சமர்ப்பிக்கப்படாதபடியினாலே ரசோகுண தமோகுணங்களைவிலக்கிச் சத்வவிருத்தியை செனிப்பிக்கமாட்டாமற் போனபின்பு என் பிரகாசிக்கும். ஆசையால் வாரீர் மகானுபாவரே! அமோகமான கியானத்தை உடைத்தாகியும், பரிசுத்தமான கீர்த்தியையுடைத்தாகியும், எதார்த்தத்திலே விருப்பமுண்டாகியும், சத்தியத்தில் மெய்ஞ்ஞானத்தில் ருசியுண்டாகியும், உசிதவிரதங்களை அனுஷ்டித்திருக்கிற தேவரீர் சகலமான சமுசாரங்களுடைய பந்தங்களை விலக்கப்பட்ட திருவிக்கிரமனுடைய திவ்ய லீலைகளைத் தியானஞ்செய்து சாக்ஷாத்காரஞ் செய்யவேண்டும். இந்தப் பகவானுடைய லீலைகளைப்பார்க்கிலும் வேறான தருமங்களை நினைத்தும் விரும்பியும் சொல்லுகையால், அந்தந்தத் தருமங்களை, நிச்சயித்த ஜனங்களுக்கு அந்த ஹீன தருமங்களுடைய போகங்களிலேயும் ஸ்வரூபக்கியானங்களினாலேயும் தேறித் தெளிந்தவர்களுக்கு ஓரிடத்திலும் நிலைகொள்ளாமலிருக்கிற புத்தியானது பெருங்காற்றில் அடிபட்டகப்பல்போல் தன்னிலையில் ஒருகாலத்திலும் நிற்கமாட்டாது. சுபாவமான ஆசையுள்ள ஜனங்களுக்கு தருமத்தைப் போதிக்கவேண்டி இழிவானவிதிகளைச் சொல்லுகிறது மிகவும் கரைகடந்த சொல்லுகள். அந்தச்சொற்களாலே சொல்லப்படுகிறதே தருமமென்று நிச்சயித்த ஜனங்கள் அது ஈன தருமமென்று அதைத் தவிர்ந்து சிலாக்கியதருமமான ஹரிசரித்திரங்களை விரும்பமாட்டார்கள். சகலலோகநாதனுடைய ஆதியந்தமில்லாத மகிமையை நினைத்து அவன் கயிங்கிரியரூபமாக அனுஷ்டிக்கிற நிசவிருத்தி தருமங்களாலே வருகிற சுகத்தை அறிந்து வயிலக்ஷணியந் தெரிந்தவன் எவன் தான் விரும்பமாட்டுவான்? பிரகிருதிகுணங்களாலே பரவசமாகி அபிமானத்துடனே கூடிய ஜனங்களுக்கு உபயவிபூதி நாயகனாகிய ஸ்ரீஹரியுடைய திவ்யசரித்திரங்களைத் தெரியச்சொல்லவேண்டும் ஸ்வாமியென்று சொல்லி மறுபடியும்சொல்லுகிறார்.

அபக்குவமான மனதையுடைத்தானவன் வர்ணாசிரமத்துக்கு யோக்கியமான தருமங்களை ஸ்ரீஹரியினுடைய சரணகமலங்களை பஜனஞ்செய்தவன் அந்த சென்மத்தைவிட்டு நிகிருஷ்டமான சென்மத்தை எடுக்கையிலும், எதாகிலும் ஒரு சென்மத்தில் அந்த அசுமத்தைத்தவிர்ந்து உத்தமகெதியையடைந்தானாகில் தனக்கு

உசிதமான வர்ணாசிரமதருமங்களையும் பலாபேக்ஷையைவிட்டு அனுஷ்டித்து ஸ்ரீஹரிபசனஞ்செய்கிற பேர்கள் அற்புதமான பரமபதத்தை அடைகிறதற்குச் சொல்லவேண்டியதென்ன. அவரவர் செய்த புண்ணிய பாவங்களினால் சொர்க்கநரகங்களென்கிற துஉயர்ந்ததும் தாழ்ந்ததுமான விடங்களில் சுழன்றுதிரிகிற பிராணிகளுக்கு துற்பலமாகிய தருமம் உலகத்தில் யாதொன்றுண்டோ அதனுடைய சம்பாதனத்தி லெத்தனஞ்செய்யவேண்டும், சகல லோகங்களிலும் அளவிட்டு அறியக்கூடாத வேதத்தையுடைத்தான காலசக்கரத்தினாலே வருகிற பாவதுக்கங்களுண்டாகிறாப்போலே புண்ணியங்களாலே சுகங்களும் தான்வேண்டாம லிருந்தாலும் வருமாகையால் அந்தச் சுகிர்தக்கினியானவன் வேண்டான், வாரீர் சிரேஷ்டரே! ஸ்ரீமுகுந்தனுடைய பஜனஞ்செய்கிறவன் இதரஜனங்களைப்போல சமுசாரத்தை எத்தனைப் பிரயாசத்திலும் ஒருகாலத்திலும் சேர சம்மதிக்கமாட்டான். அந்த ஸ்ரீமுகுந்த சரணாம்புஜரசமறிந்தவன் அவன் திருவடிகளுடைய சம்கிலேசத்தை நினைத்து நினைத்து கோரமான சமுசாரத்தைத் தள்ளவேண்டுமென்றே நினைப்பான். எந்தப்பகவானிடத்திலேஇந்தவுலகங்கள் செனித்தனவோ? எவனிடத்தில் லயத்தை யடைகின்றனவோ? அந்தப் பிரிவில்லாத காரணனான அந்த வாசுதேவனிடத்தில் நிலைபொருந்தியிருக்கிற சேதனசேதன சமூகமாகிய இந்தவுலகம் அந்த வாசுதேவ ஸ்வரூபமேயல்லாமல் வேறல்ல. சூட்சுமமாகி சேதனசேதன சரீரகனான வாசுதேவ ஸ்வரூபமாகிய காரியமான உலகமென்று அறிவில்லாத ஜனங்களுக்கு இந்தவுலகங்கள் வேறுபோலே காணப்படும். இதை தேவரீரும் அறிவீர். ஓமஹானுபாவரே! கருமவசமாகிய செனனமில்லாமல் இச்சையினாலே அநேக அவதாரங்களை தரிக்கிற பரமபுருஷனாகிய பரமாத்மாவினுடைய அம்சத்தைப் பரிபூரணக்கியானியான தேவரீர் உமக்கு ஆத்மாவாக நீரே அறிந்துகொண்டு இந்தப் பிராணிகளுடைய க்ஷேமத்தைக்குறித்து இதற்குச்சாதனமான தருமத்தைநினைத்து எத்தனஞ் செய்யவேண்டும் இப்படிக்கொத்த சுகிர்தம் ஏதென்றால் உலகத்தில் புருஷாள்செய்கிறவேதாந்த சிரவணத்தினாலும் பூரண தக்ஷணையுடனே அனுஷ்டித்தயக்கியங்களாலும், தவசுகளாலும், சுக்தபாராயணங்களாலும் தடாகங்களுடைய நிர்மாணமாகிற அர்த்தங்களாலும், தானங்களாலுமுண்டாகிய புண்ணிய பலத்

தினுலே வாத்தக்கது அந்தப் பலன்களுக்கு உயர்ந்தபலனை விசாரித்து நிச்சயித்து புண்ணியசுலோகனுகிய பகவானுடைய கீர்த்தனமன்றி வேறில்லை என்றுபதேசித்துவிட்டு நாரதமகாமுனிவர் அந்தரத்தியான மாயினர்.

வியாசபகவானுக்கு நாரதர் உபதேசித்த

ஹரிப்பிரபாவம்-முற்றிற்று.

---

## புத்திரன்மரித்த சித்திரகேதுவின்

# சோகந்தீர்த்தது.

---

சித்திரகேதுவுக்கு மகாப்பிரயாசத்தினுலே அடையப்பட்ட புத்திரன் மரித்துப்போகையில் அந்தப் புத்திரனிடத்தில் அதிவாற்சல்லியத்தினுலுண்டான மகத்தான சோகமானது சொல்லப்படுகின்றது.

அகண்டமண்டலாதிபதியாய் சித்திரகேதுவென்று ராஜனிருந்தான் அந்தராஜனுக்கு கோடி ஸ்திரீகள் பாரியைகளாக வுண்டாயிருந்தாலும் அவர்களிடங்களிலே புத்திரசம்பத்தை யடையாமற்போனுன் ரூபம்-அவுதாரியம்-யௌவனம்-வித்தை-அயிஸ்வரியம்-கியானம் இதுகள் முதலான சமஸ்தகுணங்களுடனே இருந்தும் மனது சந்தோஷத்தை அடையாமற் போச்சுது. ஒருநாள் இந்த லோகங்களெல்லாம் சஞ்சரியாநின்ற பகவானுன அங்கிரசு மகாரிஷியானவர் ஸ்வய இச்சையினுலே அந்த சித்திரகேதுவினுடைய கிரகத்தை அடைந்தார். மகாபுத்திமானுன சித்திரகேதுவானவன் அவரைக்கண்டு எதிர்கொண்டு அர்க்கிய முதலானதுகளினுலே எதா சாஸ்திரமாகப்பூசித்து,ஆதித்தியத்தையும் பண்ணுவித்து, சுகாசனத்திலே யிராநின்ற அந்த ரிஷியினுடைய சமீபத்திலே தானும் இருந்தான் அந்த அங்கிரசு மகாரிஷியும், இந்தப்பிரகாரம் பூசியாநின்ற ராஜாவைக் கொண்டாடிச் சொல்லுகிருர். வாராய் மகாராஜனே! உனக்கும் உன்னுடைய மந்திரி முதலான பிரகிருதிகளுக்கும் ஆரோக்கியமும் க்ஷேமமும் உண்டாயிருக்கிறதாவென்றும், உன்னுடைய காந்தியீனமான முகத்தைப் பார்த்தால் உன்னை மனோரத பூர்த்தியில்லாதவனுய் பார்க்கிறேனென்

றும், சர்வக்கியரான ஆங்கிரசரிஷியினாலே கேழ்க்கப்பட்டவனாய் புத்திரார்த்தியான சித்திரகேதுவானவன் வணக்கத்துடனே பிரணாமம் பண்ணி அந்த ரிஷியைகுறித்து ஒருவார்த்தை சொல்லுகிறான்.

வாரீர் பகவானே! தபசு-தியானம்-சமாதி- இதுகளினாலே சகல பாபங்களையும் நாசம்பண்ணுகின்ற யோகிகளான உங்களைப் போலொத்த பேருக்குபிராணிகளினாலே உள்ளும்புறம்புமாயிருக்கும் அர்த்தமானது எதுதான் அறியப்பட்டதல்ல ஆனாலும் என் மனதிலேயிருக்கிறதைச் சொல்லுகிறேன் லோகபாலாளாலேயும் பிரார்த்திக்கத்தக்கதுகளான சாம்பிராச்சியம் அயிஸ்வரியம் இதுகள் அபுத்திரனை என்னைச் சந்தோஷிப்பிக்கவில்லை ஆனபடியால் என்னை ரட்சிக்கக்கடவீர் பூர்வீகாளான நம்முடைய பிதுர்பிதாமகாதிகளுடனேகூட அடையப்பட்டதாய் தாண்டக்கூடாததான நரகத்தைப் புத்திரனாலேயெப்படித்தாண்டுவமோ அந்தப் பிரகாரம் எனக்கு அனுக்கிரகம் பண்ணக்கடவீரென்று அந்த ராஜாவினாலே பிரார்த்திக்கபட்டவராய், தவஷ்டாவினுடைய சறுவைப் பண்ணிவைத்து அந்தச் சருவினாலே அந்த துவஷ்டா ஆனவரைக் குறித்து எக்கியம் பண்ணிவைத்து அந்தச் சித்திரகேதுவினுடைய ஸ்திரீகளுக்குள்ளே முதல்பட்ட மகிஷியான கிறுதத்துதியென்று பேரையுடையவளுக்கு அந்த ரிஷியானவர் அந்தயக்கிய சேஷமான சறுவைக்கொடுத்து சித்திரகேதுவைப் பார்த்து வாராய் ராஜனே! உனக்குச் சந்தோஷத்தையும் துக்கத்தையுங் கொடுக்கத்தக்கினவனாய் ஒருபிள்ளை பிறக்கப்போகிறானென்றுசொல்லி அந்த ரிஷியானவர் போய்விட்டார். பிற்பாடு சித்திரகேதுவினுடைய பட்ட மகிஷியான அந்த கிறுதத்துதியும் அந்தயக்கிய சேஷத்தினுடைய பக்ஷணத்தினாலே கெர்ப்பத்தைக்கிரகித்து சுக்கிலபட்சத்துச்சந்திரன்போல நாள்தோறும் மெள்ள மெள்ள விர்த்தியடைந்து பிரசவகாலத்திலே புத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரோச்சவத்தினாலே ராஜாவானவன் சந்துஷ்டனாய் ஸ்நானம் பண்ணி சுசியாயலங்கரித்துக் கொண்டு பிராமணாளாலே ஆசிர்வசனங்களைச் செய்வித்து அந்தப் பிள்ளைக்குச் சாதகர்மத்தைப் பண்ணிவைத்து பிராமணாளுக்கு வேண்டிய தானங்களைக் கொடுத்து அந்தப் பிள்ளையினிடத்திலே மிகவும் பிரீதியாய் நாள்தோறும்விர்த்தியடைந்து வந்தான் தாயாரான கிறுதத்துதிக்கும் அந்தப் புத்

திரனிடத்திலே பிரீதியானது மிகவுமுண்டாச்சுது சக்களத்திகளுக்கோ வென்றால் புத்திரன் வேணுமென்கிற இச்சையுண்டாச்சுது நாள்தோறும் அந்த குழந்தையைச் சீராட்டிக் கொண்டிராநின்ற அந்தச் சித்திரகேதுவுக்குப் பிள்ளையைப்பெற்றஅந்த ஸ்திரீயினிடத்தில் எப்படிபட்ட பிரீதியுண்டாயிருந்ததோ அப்படிபட்ட பிரீதிமற்ற ஸ்திரீகளினிடங்களி லில்லாமற்போச்சுது அந்த ஸ்திரீகள் புத்திரனையுடைய சக்களத்தியினிடத்திலே பொறாமையினாலேயும், தங்களுக்குப் பிள்ளையில்லையென்கிற துக்கத்தினாலேயும் ராஜாவினுடைய அநாதரவினாலேயும், விசனத்தை யடைந்தவர்களாய்த் தங்களை சிந்தித்துக்கொண்டார்கள். இந்தப் பிரகாரம்சக்களத்தியினுடைய புத்திர சம்பத்தினாலே மிகவும் தகிக்கப்படாநின்றும் ராஜாவுக்கு இஷ்டமில்லாதவராயு மிருக்கிற அரித ஸ்திரீகளுக்கு மகத்தான துவேஷம் உண்டாகி ராஜாவின்பேரில் கோபமுடையவர்களாய் அந்தப்பிள்ளைக்கு விஷத்தைக்கொடுத்தார்கள் தாயான கிறுதத்துதியானவவள் சக்களத்திகளுடைய பாபகர்மத்தை யறியாதவளாய்ப் பிள்ளை தூங்குகிறானென்றே யெண்ணிக்கொண்டு கிரகத்திலே சஞ்சரித்துக்கொண்டிருந்தாள் பிள்ளை வெகு நேரமாகத் தூங்குகிறானென்று அறிந்து புத்திசாலியான அந்தக்கிறுதத் துதியானவள் தன் பிள்ளையை எடுத்துக்கொண்டு வரும்படி முலைகொடுக்குந் தாதியை எவினாள் அந்தத் தாதியானவள் படுத்துக்கொண்டிரா நின்ற அரிதக் குழந்தையினிடத்திற் போய் அது உயிர் நீங்கியிருப்பதைக் கண்டு ஐயோவென்று பூமியில் விழுந்து அலறி அழுகின்ற தாதியினுடைய தொனியைக்கேட்டு, அந்தப் பிள்ளைக்குத் தாயான ராஜமகிஷியானவள் சீக்கிரமாகப் புத்திரனிடத்தில் வந்து செத்துக்கிடக்கிற அந்தப் பிள்ளையைப்பார்த்து மிகுந்த சோகத்தினாலே பூமியில் விழுந்து பிடவை தலைமயிர் நழுவிப்போக மூர்ச்சையடைந்தாள். பிற்பாடு ராஜாவினுடைய அந்தப்புரத்திலே யிருக்கிற ஸ்திரீகள் புருஷாள் சமஸ்தசெனங்களும் அந்த ரோதனத்தைக்கேட்டு ஓடிவந்து மிகவும் விசனத்தையுடையவர்களாய் துக்கத்தையடைந்தார்கள். அந்தக் குழந்தையைக் கொன்றுபோட்ட சக்களத்திகளும் எல்லாரையும் போலக் கபடமாக அழுதுகொண் டிருந்தார்கள். பிற்பாடு அந்த ராஜாவும் ஒருத்தராலேயுங் காணப்படாத மரணநிமித்தத்தை யுடையவனாயிருக்கிற பிள்ளை செத்துப்போனான் என்கிற

வார்த்தையைக்கேட்டு, புத்திரனிடத்தில் வாற்சல்லியத்தினலே துக்கமுடையவனுய் மூர்ச்சையடைந்து மந்திரிமுதலான சமஸ்தமான ஜனங்களாலே சூழப்பட்டவனுய்பிரக்கியையில்லாதவனுய் ஓடிவந்துசெத்துகிடக்கிற அந்தக்குழந்தையினிடத்திலேவிழுந்து பெருமூச்சுவிட்டுக் கண்ணீரைப்பெருக்கி ஒன்றுஞ்சொல்லமாட்டாமல் விசனப்பட்டுக்கொண்டிருந்தான். அப்போது அந்தராஜமகிஷியானவள் மகாதுக்காக்கிராந்தனை பர்த்தாவையும் வம்கிஷத்துக்கு ஒருவனுயும்-மரித்துப்போயிருக்கிற புத்திரனையும்பார்த்து, ஜெனங்களுக்கும் இராஜாவுக்கும் மந்திரி முதலான பிரகிருதிகளுக்கும் மனசிலே மகாதுக்கமுண்டாகத்தக்க தான் பிரலாபித்தாள் குங்குமக்குழம்பினுல் அலங்கரிக்கப்பட்ட ஸ்தனங்களிரண்டையும், மையுடன்கூடின கண்ணீர்களினுல் நனைத்துக்கொண்டும் நழுவாநின்ற பூமாலைகளையுடையதான தலைமயிர்களை விரித்துக்கொண்டும் துக்கத்தினுல் துணையிழந்த பட்சிபோலமதுரமான சுவரத்துடனே அழத்தொடங்கினள். வாராய்குழந்தாய்! நீ அநாதையாயிருக்கிற என்னையும் சோகத்தினுல் தபியாநின்ற உன்னுடைய பிதாவையும், விட்டுவிடுகைக்கு யோக்கியனன்று, உன்னுல் புத்தியீனுளாலே தாண்டக்கூடாதயாதொரு நரகத்தை நாங்கள் சீக்கிரமாகத் தாண்டுவோமோ? அப்படிப்பட்ட நரகத்தை நிர்த்தயனுன எமனுலே நீ அடையவேண்டாம். வாராய் குழந்தாய்! எழுந்திரு ராஜகுமாரனே உன்னுடைய ஸ்நேகிதாளான இந்தப் பிள்ளைகள் விளையாடுவதற்கு உன்னை யழைக்கிறுர்கள். வாராய் ராஜகுமாரனே! வெகுபோதாக தூங்குகிருய்,பசித்திருக்கிற நீசாப்பிடவா. ஸ்தன்னியத்தைப் பானம்பண்ணு, உனது வாய்மொழியால் எங்களுடைய துக்கங்களைப் போக்கடி. என்று இந்தப்பிரகாரம் பிரலாபங்களினுலே புத்திரனைக்குறித்து அந்த ராஜமகிஷியானவள் ரோதனம் பண்ணுகையில், சித்திரகேதுவென்கிற அந்தராஜாவும் சோகத்தினுல் தபிக்கப்பட்டவனுய் கண்டத்தைவிட்டழுதான். அந்தராஜாவும் ராஜமகிஷியும், பிரலாபிக்கிறதைப்பார்த்து அவர்களை உபசிவித்துக்கொண்டிருக்கிற ஸ்திரீபுருஷாள் சமஸ்தமானபேர்களும் மிகவுமழுதார்கள். அந்தப்பட்டணமெல்லாம், மூர்ச்சை யடைந்ததாகவாச்சுது. இந்தப்பிரகாரம் மூர்ச்சையடைந்ததாயும், பிரக்கியையில்லாமலும் அநாதையாயுமிருக்கின்ற அந்தப்பட்டணத்து ஜெனத்தைக் யௌனதிரு

ஷ்டியினாலேபார்த்து அங்கிரசு மகாரிஷியானவர் நாரதமகாரிஷியுடனே கூடி அவ்விடத்தில்வந்தார்.

அங்கிரசு மகாரிஷியுடனே கூடிக்கொண்டிருக்கிற நாரத மகாரிஷியினுடைய தத்துவவுபதேசத்தினாலே சித்திரகேதுவினுடைய சோகமானது போக்கடிக்கப் படுகிறதென்று சொல்லப் படுகின்றது.

உத்தமமானபுத்திரன் மரித்துப்போயிருக்கிறதால்அக்குழந்தைசந்நிதானத்திலே மூர்ச்சாக்கிராந்தரனாய் மிறு தன்போலேயிருக்கிறஅந்தராஜாவைப்பார்த்து, ஆங்கிரசுமகாரிஷி,நாரதமகாரிஷியும், தத்துவவசனங்களினாற்போதித்து அவனுடைய துக்கந்தீரும்படியாக ஒருவார்த்தை சொல்லுகின்றார்கள். ஓய் ராஜேந்திரா! நீஎவனைப் பார்த்துத்துக்கிரையோ அவனுனக்கு என்னஆகவேணும்? நீ இவனுக்கென்ன ஆகவேணும்? நீ இவனுக்குப் பிதாவென்றிருந்தையேயானால்? இவன் பூர்வஜென்மத்தில் ஒருவன் பிள்ளையாயிருந்து மரணதாபத்தினால் அவர்களைவிட்டு இந்தஜென்மத்தில் உனக்குப்பிள்ளையானான். இனிவருகிற ஜென்மத்தில் எவனுக்குப் பிள்ளையாகப்போகிறானோ? அதுநியமமில்லை. எப்படியானால் பிரவாகத்தினுடைய வேகத்தினால் மணல்கள் கூடிக்கூடிப் பிரிந்துப்போகிறதுகளோ? அப்படி யிந்தசீவாத்மாக்களும் காலவேகத்தினால் கூடிக்கூடிப் பிரிகின்றதுகள். பரமாத்மா வானவர் பூதங்களினால் பூதங்களைச் சிருஷ்டிக்கிறார். பூதங்களால் பூதங்களை ரட்சிக்கிறார் பூதங்களினால் பூதங்களைச்சம்மரிக்கிறார் தம்மால் சிருஷ்டிக்கப் பட்டதுகளாயும் பராதீனங்களாயு மிருக்கின்ற அந்தப்பூதங்களினால் அபேக்ஷையில்லாதவரா யிருந்தாலும்; லீலையினால் இந்தப்பிரகாரம் பண்ணிக்கொண் டிருக்கிறார். வாராய் ராஜாவே! பிதாவினுடைய தேகத்தினாலே புத்திரனுடைய தேகமானது மாதாவினுடைய தேகத்தில் நின்றும் வித்தாக உண்டாகின்றது சீவனோவென்றால் பூமிமுதலானது போல நித்தியனாகவிருக்கிறான். தேகமென்றும் தேகியென்றும்,இந்தவிபாகமானது நானாவிதமானரூபம்-ஜென்மம்-நாசம்-சுகம் - துக்கம்-இதுமுதலான அசத்தான தர்மங்கள் அக்கினிக்குதகிக்கப்படாநின்ற தாரினுடைய நிலபிதாதி விகாரங்களைப்போல ஆத்மாவுக்கு அசத்தான தேகசம்பந்தத்தினாலே காணப்படுகின்றதுகள். ஆகையினாலே

புருஷனானவன் சொர்பனத்தைப்போல இதரவிஷயங்களைச் சிந்தியாமலிருக்கக்கடவன். இதுவெல்லாம் மனதினாலே கல்பிக்கப்பட்டதே யல்லாமல் வேறொன்றுமில்லை. நானென்றும் எனதென்கிற அபிமானத்தைவிட்டுவிடு சர்வாந்திரியாமியாயும் ஈஸ்வரனாயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே மனதை வைக்கக்கடவாயென்றீ-நாரதர்-ஆங்கிரசு-இவர்களுடைய வாக்கியங்களினாலே தேறுதல் பண்ணப்பட்டிருக்கிற சித்திரகேதுவென்கிறராஜாவானவன் துக்கத்தினாலே வாடியிருக்கிற முகத்தைக் கையினாலே துடைத்துக்கொண்டு ஒரு வார்த்தைசொல்லுகிறான்.

வாருங்கள் ரிஷிகளே! நீங்களார். கியான சம்பன்னாளாய்ப் பூச்சியாளுக்கும் பூச்சியாளாக விருக்கிறீர்கள். அவதூதவேஷத்தினாலே உங்களுடைய சுரூபத்தை மறைத்துக்கொண்டு இங்கே வந்தீர்கள் பகவானுக்கு இஷ்டர்களாய் பிர்மநிஷ்டர்களான பாகவதாளும் சனற்குமாரர்-நாரதர்-றிபு-ஆங்கிரசு-தேவலர்-அசிதர் அவாந்தரதமசு-வியாசர்-மார்க்கண்டேயர்-கவுதமர்-வசிஷ்டர்-பகவானான பரசுராமர்-கபிலர்-சுகர்-துறுவாசர்-இவர்கள்முதலான ரிஷிகளும் என்னைப்போலொத்த அக்கியானிகளுக்குக் கியானோபதேசத்துக்காகப் பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருப்பார்கள். ஆனபடியினாலே நரபசுவாயும், மூடப்புத்தியாயும், மகா அக்கியானத்தினாலே முழுகியிருக்கிற எனக்கு நீங்கள் ரக்ஷகர்களாய் வந்தீர்கள் கியானமாகிற தீபம் உங்களாலே உண்டாக்கப்படுமென்று சொல்லாநின்ற ராஜாவைப்பார்த்து ஆங்கிரசுமகாரிஷியானவர் சொல்லுகின்றார். வாராய் ராஜனே! நான் புத்திரகாமனான உனக்குப் புத்திரனைக்கொடா நின்ற ஆங்கிரசு இவரோ சாக்ஷாத் பிர்மமகுமாரரான நாரதமகாமுனிவர் அக்கியானத்தினாலே புத்திரசோகத்தில் முழுகினவனாயும் பகவானுக்குப் பக்தனாயுமிருக்கிற நீ துக்கத்திலே முழுகியிருக்கிறாயென்றறிந்து உனக்கு அனுக்கிரகம் பண்ணுகிறதின்பொருட்டு நாங்களிருவரும் இங்கேவந்தோம் பூர்வம் நான் வந்தபோதே பரமமான கியானத்தை வுனக்கு உபதேசிக்க வேணுமென்றே உன்னுடைய கிரகத்துக்கு வந்தேன். உனக்குப் புத்திரனிடத்திலே யிருக்கிற ஆசையையறிந்து புத்திரனையே கொடுத்தேன். இப்போது பிள்ளையை இழக்கப்பெற்றவர்களுடைய துக்கமானது உன்னாலேயும் அநுபவிக்கப் பட்டதல்லவா பாரியை-கிரகம்-தனங்கள்-நானாவிதமான அயிஸ்வரியசம்பத்

துக்கள் அனித்தியங்களாயும், சொர்ப்பனம்போலவும், மனதினுலே உண்டாக்கப்பட்டதுகளாய் நசித்துப்போகின்றதுகள் கர்மமூலமாகவே விஷயங்களுண்டாகின்றதுகள். ஆகையினல் ஸ்திரமானமனதினுலே ஆத்மதத்துவத்தைப்பராமரித்து அநித்தியமானதேகத்திலே நித்தியாத்மாவென்கிற விசுவாசத்தைவிட்டு சாந்தியையடையக்கடவாயென்றுஆங்கிரசுவாலே உபதேசிக்கப்பட்ட ஆத்ம தத்துவமானது பகவத்கடாக்ஷமில்லாமல் சித்தியாமற்தன்று ஈஸ்வரர்கடாக்ஷம் வருகிறதற்காக நாரதமகாரிஷியானவர் ராஜாவுக்கு மந்திரோபதேசம் பண்ணுகின்முர்.

வாராய் ராஜனே! என்னுடைய இந்த ரகசியமான மந்திரத்தைப் பரிசுத்தனுயிருந்து கிரகிக்கக்கடவாய் இந்த மந்திரத்தை ஜெபியாநின்ற நீ யேழுராத்திரிகளுக்குள்ளே சிருஷ்டி-ஸ்திதி-சங்கார கர்த்தாவான சங்கருஷ்ணருடைய பாதமூலத்தை ஆஸ்ரயித்துப் பூர்விகாளான ருத்திரன் முதலான மகானுபாவாள்-தேவன்-மனுஷ்யனென்கிற பொய்யான பேதக்கியானத்தைவிட்டு அந்தக்ஷணத்திலே சமாதிக சூனியமான அந்தச்சங்கருஷ்ணருடைய பரமமகத்துவத்தை நீ சீக்கிரமாக அடையப்போகிருய்.

மிருதனுன அந்தப் பாலனுடைய வசனத்தினுல் தானே சித்திரகேதுவைச் சோகமில்லாதவனுகப்பண்ணி நாரதர் ஆதிசேஷனைச் சந்தோஷிப்பியாநின்ற மகாவித்தையை உபதேசித்தாரென்றுசொல்லப்படுகின்றது.

சித்திர கேதுவின்மேல் மிகவுங் கருணையுடைய தேவரிஷியான நாரதர் மிருதனுனராஜகுமாரனைத் துக்கியாநின்றராஜாவுக்கும் அவனுடைய பந்துக்களுக்குங் காண்பித்து அந்தச்சிசுவைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிருர். வாராய் ஜீவாத்மாவே! உனக்கு நன்மையுண்டாகக் கடவது உன்னிமித்தமாகத்துக்கத்தினுலே தபிக்கப்படாநின்ற தாயார்-தகப்பனுர்-பந்துக்கள்-கியாதிகள்-இவர்களைப்பார். உன்னுடைய இந்தச் சரீரத்திலே பிரவேசித்துச் சுதுர்துக்களால் சூழப்பட்டவனுய், மிகுந்த ஆயுசையடைந்து பிதாவினுடைய சம்பத்துகளைச் சிங்காதனத்திலிருந்துகொண்டு அனுபவி என்று சொல்லாநின்ற நாரதமகாரிஷியினுடைய வாக்கியத்தைக்கேட்ட மிருதனுன அந்தப்பாலன் சொல்கின்முன். வாரீர் பிர்மநிஷ்டரே! புண்ணியபாப ரூபகர்மங்களினுலே தேவர்கள்-திரியக்கு-மனுஷ்யாள்-இவர்களுடைய யோனி

களிலே சுழலாநின்ற வெனக்கு எந்தஜென்மத்திலே இவாள் மாதாபிதாக்களானூர்கள். சகல பிராணிகளும் ஒன்றுக்கொன்று கிரமமாகப் பந்துவென்றும் கியாதியென்றும், சத்துருவென்றும் இப்படியாக விருக்கின்றூர்கள். ஜீவித்துக்கொண்டிரா நின்ற பசுவாதி வஸ்துக்களானது எவனண்டையிலே எவ்வளவு காலமட்டுமிருக்கிறதோ? அவ்வளவுமட்டுமே யெனதென்கிற சம்பந்தமுண்டாயிருக்கும். இந்தப் பிரகாரம் சிவனானவன் புத்திராதி சம்பந்தத்தை யடைந்திருந்தாலும், ஜென்மாதி சூனியனுயும் நான் இவனுடைய பிள்ளையென்கிற அபிமான சூனியனுயுமிருப்பன்என்று சொல்லிப்போட்டு அந்த சிவனானவன் புறப்பட்டுப்போனுன். அப்போது அவ்விடத்திலே அவனுடைய கியாதிகளெல்லாரும் ஆச்சரியத்துடனே கூடினவர்களாய் அந்தச்சிசுவினிடத்திலே சிநேகபாசத்தையும் சோகத்தையும் விட்டவர்களாய் அந்தச் சிசுவினுடைய தேகத்தை யெடுத்துக்கொளுத்தி, செய்யத்தக்க காரியங்களைச்செய்து-சோகம்-மோகம்-பயம்-ஆர்த்தி இதுகளைக் கொடாநின்ற விடக்கூடாத சிநேகத்தை விட்டுவிட்டார்கள். வாராய் மகாராஜனே! பாலனைக்கொன்ற அந்தஸ்திரீகளும் மகாலச்சையையுடையவர்களாய் பாலஹத்தியாதோஷத்தினுலே காந்தியீனர்களாய் பிராமணர்களாலே விதிக்கப்பட்ட பாலஹத்தியாவிரதத்தை யமுனாநதிதீரத்திலே சிவனுடைய வசனத்தை நினைத்துக்கொண்டு துவேஷத்தை விட்டவர்களாய் ஆஸ்ரயித்தார்கள், அந்தச் சித்திரகேதுவும் பிராமணனுடைய வசனங்களினுலே ஆத்மதத்துவத்தை அறிந்தவனுய் யமுனாநதியிலே எதாசாஸ்திரமாக ஸ்நானஞ்செய்து தேவரிஷி பிதுர்த்தர்ப்பணமுதலான கிரிகைகளையும் பண்ணி மவுனத்துடனே சிநேந்திரியனுய்ப் பிர்ம்மபுத்திரர்களான நாரதரையும், ஆங்கிரசுமகாரிஷியையும் வந்தனம்பண்ணினுன். அப்போது நாரதமகாரிஷியானவர் சந்துஷ்டராய் அந்தச் சித்திரகேதுவுக்குப் பிர்ம்மவித்தையை உபதேசிக்கின்றூர், கியானசக்தி முதலானகுணங்களையுடையவராயும், வாசுதேவராயும், பிரத்தியுனராயும், அனிருத்தராயும், சங்கருஷ்ணராயும், விக்கியான சுரூபராயும், பரமானந்த மூர்த்தியாயும், பரானுபவ நிஷ்டராயும், சாந்தராயும், சுவானந்தானுபவத்தினுலே நிசேஷமாக ராகத்துவேஷ முதலான ஏயகுணங்களை விட்டவராயுமிருக்கிற உமக்குப் பிரணமம். மண்மயமான கடமுதலானதுகள் மண்ணி

லேபிறந்து மண்ணிலேயிருந்து மண்ணிலேலயிக்கிறதுபோல, இந்தப் பிரபஞ்சமானது யாதொரு பிர்மத்திலே லயத்தையடைகிறதோ? அப்படிப்பட்ட பரப்பிர்ம்மான உமக்குப் பிரணாமம். சமஸ்தமான பாகவத சிரேஷ்ட சமுகங்களுடைய கமலமுகளம்போலொத்த கைகளினலே அர்ச்சிக்கப்பட்ட இரண்டுசரணாரவிந்தங்களையுடையவரே! பரமாகாச மென்னப்பட்ட வுத்தமஸ்தானத்தை இருப்பிடமாகவுடையவரே! பகவானும், மகா புருஷனாயும் மகா விபூதியாயுமிருக்கிற உமக்குப்பிரணாமமென்று பிரபன்னராயும், பக்தனுயுமிருக்கிற சித்திரகேதுவுக்கு இந்த மந்திரத்தையுபதேசித்து நாரதமுனியானவர் ஆங்கிரசுடனேகூட சத்தியலோகத்தை யடைந்தார்.

மஹாகீர்த்திசாலியான அந்தச் சித்திரகேதுவும் நாரதராலே சொல்லப்பட்ட வித்தையை எழுநாள் ஜலத்தையே பானம் பண்ணிக்கொண்டு தயிரியத்தையுடையவனாய் மந்திரத்தை ஜெபித்தான். பிறகு ஏழாநாளிராத்திரி முடிவிலே மந்திரசித்தியடைந்து பின்னையும் சிறிதுநாளைக்குப்பின்பு வித்தையினல் உண்டாகாநின்ற மனோவேகத்தையுடையவனாய், தேவதேவனான ஆதிசேஷனுடைய சரணாரவிந்த சந்நிதானத்தையடைந்து தாமரைக் கிழங்குபோலே வெளுத்தநிறமாயும், நீலவஸ்திரதாரியாயும், பிரகாசமான-கிரீடம்-தோள்வளை-அரைஞாண்-கங்கனம்-இதுகளையுடையவராயும், பிரசன்னமானமுகத்தையும், சிவந்த நேத்திரங்களையுடையவராயும், சிருஷ்டி-ஸ்திதி சங்காரகர்த்தர்வாயுமிருக்கிற சங்கருஷ்ணமூர்த்தியினுடைய சந்தெரிசனத்தினலே சமஸ்தபாபங்களையும்போக்கி, நிர்மலமான அந்தக்கரணத்தையுடையவனையும், பக்திரசத்தினலே பிரவகியாநின்ற ஆனந்தபாஷ்பங்களுடனே கூடினவனையும், புளகாங்கிதசரீரத்தையுடையவனையும், அந்த ஆதி புருஷனைச் சேவித்தபின்பு புண்ணியகீர்த்தியான சங்கருஷ்ணமூர்த்தியினுடைய பாதாரவிந்தங்களைச் சேவிக்கச் சமர்த்தனகாமலிருந்து புத்தியினலே மனதை ஸ்திரம்பண்ணிக்கொண்டு பிரகாசியாநின்ற வாக்கையுடையவனாய் ஜெகத்குருவான பகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான். வாரீர் ஒருவராலும் ஜெயிக்கப்படாதவரே! சமமான புத்தியையுடையவர்களாயும் ஜெயிக்கப்பட்ட மனதையுடையவர்களாயு மிருக்கிற சத்புருஷாளாலே நீர் ஜெயிக்கப்பட்டீர் அவாளும் உம்மாலே ஜெயிக்கப்பட்டவர்களாகின்

ரூர்கள். ஜெகத்தினுடைய சிருட்டி-திதி-சங்காரம்-அனுப்பிரவேசம்-நிக்கிரகம்-அனுக்கிரகம் இவையெல்லாம் உம்முடைய லீலையே விஸ்வத்துக்கு சிருஷ்டாக்களான-பிர்மா-ருத்திரன்-நவப்பிரஜாபதிகள்-இந்திரன் இவர்களெல்லாம் தனித்தனியே உம்முடைய அங்கிச பூதாளாகவிருக்கிறபேர் ஆகிலும் அக்கினியான மூலமான அகங்கார மமகாரங்களினாலே அந்தச் சிருஷ்டிமுதலானவியாபாரங்களிலே நாங்களே யீஸ்வராளென்று வியர்த்தமான சண்டை போடுகின்றூர்கள். அதிசூட்சமமான மூலகாரண மென்ன, அதிஸ்தூலமான அந்தியமான காரியமென்ன, இதுகளுடைய ஆதிமத்தியாந்தங்களிலே நீரேயிருந்துகொண்டு நீர்ஆதிமத்தியாந்தமில்லாத வஸ்துவாகக் காணப்படாநின்ற காரியங்களுக்கு,ஆதியிலேயும், அந்தத்திலேயும்,எது அபயமில்லாமலிருக்கிறதோ? அதுவே மத்தியகாலததிலேயு மிருக்கிறது. பிரிதிவு-அப்பு-தேயு-வாய்வு-ஆகாசம்-மகத்தத்துவம்-அகங்கார தத்துவம் என்றுசொல்லப்பட்ட ஒன்றுக்கொன்று தேசகுணுதிகங்களான இந்த யேழுகளிலேயும சூழப்பட்டிருக்கிற அண்டகோசமானது அனேகங்கோடி பிர்மாண்டங்களுடனேகூட யாதொன்று வும்மிடத்திலே சுழன்றுகொண்டிருக்கின்றது.

வாரீர்பகவானே! உம்முடைய தெரிசனத்தினுல் மனுஷ்யாளுக்குச் சகல பாபக்ஷமும் உண்டாகிறது. உம்முடைய நாமத்தை ஒருக்கால் கேட்டதினுலே சண்டாளனும் சஞ்சாரத்தில் நின்றும் விடுபடுகிறுன். ஆகையினுல் நானிப்போது உம்முடைய தெரிசனத்தினுல் இருதயத்திலிராநின்ற சகல பாபங்களேயும்போக்கடித்துக்கொண்டவனுனேன். உம்முடைய சந்தெரிசன முண்டாச்சுது. இல்லாவிட்டால் எப்படி யுண்டாகப்போகின்றதென்று சித்திரகேதுவினுல் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட பகவானுன அனந்தரானவர் சந்தோஷத்தை யடைந்தவராய் அந்த வித்தியாதரபதியான சித்திரகேதுவைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகிறுர். வாராய் சித்திரகேதுவே! உனக்கு நாரதராலேயும், ஆங்கிரசுவாலேயும் நம்முடைய விஷயமான உபதேசம் பண்ணப்பட்டு, அந்தவித்தையினுலேயும், நம்முடைய சந்தெரிசனத்தினுலேயும், நீசித்தனின்றாய் நானே சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் பிரகாசனுகவும் காரணனுகவுமிருக்கிறேன் சப்தப்பிரமமென்றும் பரப்பிர்மமென்றும்இவ்விரண்டும்என்னுடைய சாசுவதமான சரீரங்

கள் லோகத்திலே பரமாத்மாவை வியாபித்திருக்கிறவனாகவும், பரமாத்மாவினிடத்திலே லோகத்தை யிருக்கிறதாகவும், இவ்விரண்டும் என்னாலே வியாபிக்கப்பட்டதாகவும், என்னிடத்திலேயே கற்பிக்கப்பட்டதாகவும், அறியத்தக்கது எப்படியானால் தூங்காநின்ற புருஷன் சொற்பனத்திலே பிரபஞ்சத்தையெல்லாம் தன்னிடத்திலே பார்க்கிறானோ? எப்படியானால் அவன்தானேயெழுந்தவனாய் தன்னை இந்தலோகத்தில் ஏகதேசத்திலே யிருக்கிறவனாக அறிகிறானோ? அப்படி சாக்கிரமுதலான சீவனுடைய அவஸ்தைகளையெல்லாம் பரமாத்மாவினுடைய மாயாகாரியங்களாகவறிந்து இந்த அவஸ்தாதிரையத்துக்கு சாக்ஷியான அந்தபரமாத்மாவை நினைக்கக்கடவன். தூங்காநின்ற புருஷன் யாதொரு பரமாத்மசுரூபத்தினாலே நித்திராகாலத்தில் தன்னுடைய சொர்பனத்தையும் இந்திரியங்களினால் அறியக் கூடாததான சுகத்தையும் அறிகிறானோ? அந்தப் பரமாத்மாவாக என்னை அறியக் கடவாய் யோகசாஸ்திரத்தை யறிந்தவர்களாயும் வேத வித்துக்களாயுமிருக்கிற பேர்களாலே சர்வப்பிரகாரத்தினாலேயுந் தன்னுடைய பரம புருஷார்த்தமானது அறியத்தக்கது. சீவாத்ம பரமாத்மாக்களுடைய சம்பந்தத்தை சாக்ஷாத்கரிக்க யாதொன்றுண்டோ? இதுவே பரமபுருஷார்த்தமென்று அறியத்தக்கது. என்னாலே சொல்லப்பட்ட இந்தப் பரமார்த்தமான வசனத்தைசிரத்தையுடனே தரித்தவனாய் விஷயபோகங்களிலே ஆசையை விட்டவனாய், சாஸ்திரக்கியானத்தையும், பரமாத்ம சாக்ஷாத்காரத்தையும், உடையவனாய் சீக்கிரமாகச்சித்தியடையப் போகிறாயென்று ஜெகத்பதியாயும், விஸ்வரூபியாயுமிருக்கிற ஹரியானவன் சித்திரகேதுவைப் பார்த்து இந்தப்பிரகாரம் ஆக்கியாபித்து அவன்பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவ்வடத்திலே தானே அந்தர்த் தானத்தை யடைந்துவிட்டார்.

## புத்திரன்மரித்த சித்திரகேதுவின்
# சோகந்தீர்த்தது.

முற்றிற்று.

---

# இந்திரனைத் தூண்டியது.

ஒரு காலத்தில் நாரதமுனிவரானவர் இந்திரன் சபைக்குச் செல்லுகையில் அச்சமயம் இந்திராணி கேள்வனாகிய தேவேந்திரன் அப்சரஸ் ஸ்ரீகளின் இன்னிசை பரதநாட்டியத்தின்கண் மன மலர்ந்தவனாய் நாரதமுனிவர் வரவை விரவில் நோக்காதிருந்த குறிப்பை மஹரிஷியுணர்ந்துக்கொண்டு இனி எக்காலத்தில் இந்த இந்திரனை முகநாணச்செய்வோமென்று எதிர்பார்த்திருந்த நாரதமுனிவரானவர். தேவேந்திரன் சபைக்கு அன்போடு பிரவேசஞ்செய்தவராய்க் கண்களித்த அந்த இந்திரன் சோடசோபசாரத்துடன் ஆசனமமர்த்தி நமஸ்காரம்செய்து மஹரிஷியின் திருவாயமுதுக்கு செவிசாற்றுநின்ற இந்திரனை நாரதமுனிவர் நோக்கி அப்பா தேவேந்திரா என்னுடைய மனதில் மிக்க அருமையானது அதை இப்பொழுதே கண்டறியக்கூடிய நிமித்தமாக உள்ள ஒரு யோசனைப்பிறந்தது. அதை யாராச்சிக்க மற்றயாராலு மாகாதாகையால் உனக்குத் தெரிவிக்கவந்தேன். அதாவது கொஞ்ச காலத்திற்குமுன்னே என்னையும் யென்னைப்போன்ற ரிஷிக்கூட்டங்களையும் தேவர்களையும் தேவகூட்டங்களையும், உன்னையும் உன்னைப்போன்ற மற்ற திக்குப்பாலகரையும் திக்குமுக்காடி திசைகெட்டோடும்படி ஒருமுறைக்குப் பன்முறை நம்மையெல்லாம் ஆட்டிப்படைத்த தையித்தியகுலப் பூண்டுகளைக்காணோம் யாரைக்காணுவிட்டாலும் நவக்கிரகங்களைக்கூட நிலைகெடச்செய்து தகாக்கோலோச்சிய மகாபலிச் சக்கிரவர்த்தியானவன் யெத்திசையில் யெக்கெதிக் கெட்டிருக்கின்றானோ அவனிருந்தசம்பத்துக்கும்அவனால் தேவர் முனிவர் ரிஷிகள் பட்டபாட்டுக்கும், அவனை இச்சமயத்திலல்லவா பங்கப்படுத்தவேண்டுமென்று பலவாருஞ் சொல்லித் தூண்டியதை (அஞ்சியோஞ்சிப் பாராதவன் தான்சாகக்கடவனென்னும் பழமொழிபோல்) அச்சமயமே தேவேந்திரன் சத்தியலோகத்திற்குப்போய் நான்முகனைக்கண்டு நமஸ்காரம் பண்ணிக்கொண்டு ஐயா மூலீக்கமலாசனனே விரோசனனென்கிற ராக்ஷச ராஜன் பிள்ளை மகாபலி மூன்று லோகாதி பத்தியமும்

பெற்று சக்ராவர்த்தி யென்று பெயரோங்கி ஒருகுடைநிழலில் உலகையடக்கி திருகில்லாத கபருவாழ்ந்துவந்தவனைக் காணோமே அவன் இப்போது எங்கிருக்கிறான் அந்த இடத்தை யெனக்குத் தெரிவிக்கவேணுமென்றகேட்டான் அதற்குப் பிர்மானகைத்து இந்திரனைப்பார்த்து உன்மனதில் நினைத்துக்கேட்டது எனக்குத் தெரியலாயிற்று முன்னே மூவர்முதலாகிய தேவர்களையும் தலைகாட்டவொட்டாமலடித்து தனக்கு மேலான சம்பத்துடையவர்களில்லையென்று திருவிற்சிறந்துபெருவாழ்ந்தவன் அந்தவாழ்வெல்லாம் நம்முடைய கையிற் கொடுத்துவிட்டு தாழ்வையடைந்தும்போனானென்கிற தயாளத்தினாலல்லவோ என்னைக் கேட்கவந்தாய் சசிமணாளனே! அது யெனக்குத் தெரியவந்தது ஆகிலும் இப்போது அவன் இருக்கிற இடமும் ஐஸ்வரியத்திடமும் உனக்குத் தெரியச்சொல்லுகிறேன்கேள் சுரபி பயங்கரமென்கிற ரூபமெடுத்து பூமியிற்சஞ்சரிக்கின்றான். அவனைக்கண்டு நீ யென்ன செய்யப்போகிறாய் அதையெனக்குச் சொல்லென்று அவன்கேட்க இந்திரன் சுவாமி அடியேன் அவனைப்பார்த்து சிலது பேச்சுப் பேசவேண்டியிருக்குது தாங்கள் முழுமனதுடன் செலவுகொடுங்களென்று பிரதட்சண நமஸ்காரஞ்செய்து சத்திய லோகத்தைவிட்டுப் புரப்பட்டு பூலோகத்தில்வந்து காடுகள் செடிகள் மலைகள் வனாந்திரங்கள் நாடுகள் நகரங்கள் மேடுகள் பள்ளங்கள் ஆறுகள் குளங்கள் குன்றுகள் குகைகள் எங்குந்திரிந்து தேடி பூமியெல்லாம் வலமாகவந்து ஓரிடத்தில் மாறுருவத்துடன் வாசம்பண்ணுகின்ற மாபலியைக்கண்டு ஓ மஹாசக்கரவர்த்தி சயிக்கப்படாத யுத்தங்களெல்லாம்சயித்து விஜயங்கொண்டு முடிக்கக்கூடாத யாகமுதலிய வேலைகளைமுடித்து பிரபலமேன்மை படைத்து வாழ்ந்த வாழ்வெல்லாமறைந்துபோக நீர் இந்த எலிரூபமெடுத்து உமியு நெல்லுந் தின்றுக்கொண்டு உயிர்பிழைக்கும்படியாய் நேரிட்டதல்லவா! ஐயோ, உம்முடைய பெருவட்டணையும் வைபவமும் பெருஞ்செல்வமும்பிரதிஷ்டையும்வீறுப்பும் எங்களைப்போன்றவர்களை ஒரு எண்ணத்தில் மதிக்காத இறுமாப்பும் இயாவரையும் சட்டைபண்ணாதமமதையும் எங்கேமறைந்ததோ இம்மட்டோ போகம் தனுகரணபுவனபோகமெல்லாஞ் சதமல்லவெனச் சாற்றியது உண்மைதான் தெய்வமேயென்று சித்தங்கலங்கிச்சற்றுநேரம்பொறுத்து கிட்டநெருங்கி நீபயப்படாதே நான்தேவேந்

திரன் உன்னைப் பார்க்கவேண்டிய பேராசை கொண்டுவந்தேன் என்று பகர்ந்தான் அந்த மேகநாதனைப்பார்த்து மகாபலிச் சக்கரவர்த்திசொன்னான்.

ஓ-வச்சிராயுதனே எனக்கிந்தவேளை சமயமென்றறிந்து பயம்விட்டு என்னைக்கிட்டி ஈனமானபேச்சை யிசைத்துஇகட்சியாய் ஏளனம்பண்ணுகிறையோ நீ யிப்படி பேசுவதினால் பெருங்கூட்டமாகியஇராட்சசர்க்கு பலங்குறைந்து போச்சுதென்று நினைத்தாயோ இராக்கதர்களுக்கு இறக்கினும் பலஞ்சிறக்குமேயொழிய குறைச்சல்வராது முற்காலத்தில் நான்பிரபலித்திருக்குபோது எனக்கெதிரிலே நீவந்து நிற்கப்பயப்பட்டு மூலைக்குமூலை யொதுங்கியிடந்தவன் வனவேடர் மான்கும்பைக் கலைத்துவிடுவதுபோல் வாரத்திற்கொருதரம் யான்புறப்பட்டு உன்னையுந்தேவர்களையும் பொன்னுலகத்திற் றங்கவொட்டாமல் ஓட்டிக்கொண்டுதிரியும்போது நீயெங்கேயோ நானெங்கேயோ அப்பேர்ப்பட்ட அழகன் இப்போது என்கிட்டவந்து மனோதிடங்கொண்டுபயப்படாயென்று எனக்குத் தயிரியங்காட்டி காலபேத சமயங்கண்டு கசட்டுமொழி வகுக்கத் தக்க உன் நல்லநிலமோ உனக்குமுறைமோ இப்படி நீ யிசைக்கத்தகாது நான் இப்போது அனுபவிப்பதெல்லாம் உன்னாலும் என்னாலும் வந்த செயலல்ல சர்வேஸ்பரனாகிய பசுபதியின் செயலென்றறிந்து அகந்தையை யடக்கும். உலகில் ஒருவருக்குஆங்காலத்தில் எல்லாந் தற்செயலாயமைந்து கைகூடும் திக்கெட்டும் ஜயமுண்டாகும் இக்கட்டிராது, பயமில்லை பிடிச்சகாரியம் (கடிச்சவாய் துடைச்சாற்போய்வரும்) போங்காலம்வந்தால் எத்தனை பொருட்பல முற்றிருந்தாலும் பெண்டீர்பிள்ளை மண்-மனை பந்துமித்திராள்-மந்திரி-மாதவர்-குருக்கள்குடி-படை-அரண்மனை-நாடு-நகரம்-காடு-கரம்பு-நிரம்பியிருந்தாலும் சமயத்திற்குதவாமல்எல்லாந் தட்டுக்கொட்டுப்போய்விடும்.

ஆகையால் செவ்வையாய்த் தேறித்தெளிந்த அறிவுடையாளர்கள் ஜயமும்-அபஜயமும்-நன்மையுந் தீமையும் சுகமும் துக்கமும்-துன்பமும்-இன்பமும் வாழ்வுந் தாழ்வும் வறுமையுந் திறமையும் பெருமையுஞ்சிறுமையும் சமமென்றுபாராட்டி வாக்கினாற்பேசியவண்ணம் மனமுங்குவிந்து அகம்புறமொத்து அரன்செயலென்று ஆனந்தத்தைக் கைவிடாமல் அனுபவிப்பார்கள். நன்மை தீமையிலும் பொய்யவுரையார்கள் நொந்தகண்ணாற் பாரார்கள்

நாவையடக்கி சீவகாருண்யராய் எல்லாஞ் சிவன்செயலென்றிருப்பார்கள். இதுதான் பெரியோர்கணிலே சிறியோர்கணிலே நானிப்படியிருக்கிறேனென்று தெரிந்து அஞ்சாமலெடுத்துவந்து இரக்கப்படுவதுபோல் ஏசிக்காட்டினேயே இதுதான் எரியுங்கொள்ளியை உபகாரத்திற்கு ஏறத்தள்ளி இன்னந் தீமூட்டுவதுபோலுமாயிற்று இந்திரனேயென்று மகாபலிநவின்று மனதுசலித்தான்.

இப்பிரகாரந் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு தீவினை நினைத்துத் தியங்கிய மகாபலியின் தேகத்திலிருந்து சௌந்தரியமாய் ஒருவராலும் எழுதிமுடியாததாய்க் கனவாசிகளாலுங்கண் விழித்துக் காணக்கூடாதவளாய் ஆபரணவலங்கார வஸ்திரந்தரித்துக்கொண்டு சகல பாக்கியவந்தரமுள்ள இரட்சகி மகாலட்சுமி வெளிப்பட்டு ஆயிரங்கண்ணனாகிய இந்திரனுக்கு எதிரில்நின்றாள் அந்த மகாதேவியை ஆயிரங்கண்களினாலுங் கண்டு ஆறுமைகொண்டு அம்மணி நீ இந்த மகாபலிச் சக்கரவர்த்தியினுடைய உடலைவிட்டு புறப்பட்டு நாயேனுக்கெதிரிலிருக்கின்றாயே என் தாயே மனோன்மணி நீயாரம்மா தெரிந்துகொள்ளுஞ் சக்தியற்றவனாயிருக்கிறேன் தெரிவிக்கவேண்டுமென்று சிந்தித்தான் அந்தவேளையில் முக்கோடிநிறைந்த செந்தாமரைக் கமலத்தில் பிறந்தகோகநகை சமஸ்தகோடி சீவாத்மாக்களையும் இரட்சிக்காநின்றஅரிப்பிறயை ஓஆகண்டலனே-என்னையறியாயாநான் மகாலட்சுமி இதுவரைக்கும்இந்தமகாபலிச் சக்கரவர்த்தியினிடத்திலிருந்து சகல சம்பிரமமும்பெறச்செய்தேன் இவன் முன்போலில்லை கிழமகனாகி அதற்குத்தகுந்த நினைப்பு நடை நொடிபாவனை ஆசாரமுதலிய யாவுங்குன்றினான் இனிமேல் அவனண்டையிலிருக்க மனமொப்பாமல் உன்னை நாடிவந்தேன் நீயென்னை மருவி வாழக்கடவதென்றுமாயோன் மனைவி சொல்லக்கேட்டு இந்திரன் சந்திரபிம்ப இந்திரியைப் பிரதட்சணம்பண்ணி எழுந்திருந்து இரண்டு கரத்தையுஞ் சிரத்தில்வைத்து தோத்திரஞ்சொல்லி துதிக்கின்றான் நாதநாதாந்தரூபி பாலாந்தகிலே மிர்கமதபயோதரி கோடிசூரியப் பிரகாசவல்லி அமுர்தாந்தசொல்லி ஆதிசத்திவல்லி ஜகன்மோகினி சர்வபூதசொரூபி சத்காரிய சத்காரணி ஜகத்ரட்சகி தேவதேவகிதிருவே தருவே மருவே அயிஸ்வரியக்குருவே அம்மணிவருகவருக மநோன்மணிவருகவருக உருக்குமணிவருகவருகவென்று மதித்துத் துதித்துவணங்கினான்.

அந்தப் பொன்னுலகைத் திறையைக்கண்டு பூரித்து சந்தோஷித்து அவன் முகமண்டலத்திற்றுவி ஆயிரங்கண்ணுடையதேகத்தில் அபிக்ஷியமாய்விட்டாள் உடனே தேவேந்திரன் திருமால் போல் விளங்கிதேயசுடைத்தாய் ஜகமெல்லாம் புகழச் சோதியானுன் இதுகளையெல்லாங் கிட்டயிருந்து பார்த்த மகாபலியானவன் எட்டப்போயிருந்து (ஊக்கமதுகைவிடேல் யென்னும்) வாக்கியப்பிரகாரம் தயிரியத்தைவிடாமல் ஆகட்டும் எங்கேபோகிறுள் நமக்கு நல்லகாலம் வந்தால் அம்மைதிரும்பி நம்மிடம்வருவாள், இந்திரனைச் சுமையெடுக்கவைப்பாள், இவ்வாறுதானேமாறிமாறிக்கொண்டு இன்னுன் இனியானென்றெண்ணுமல் இந்தப்பூமி மலபந்தப்பூமியென்றுணராமல் எங்குந்திரிந்துழலுகிறுள் நமக்கென்னவென்று மனஞ்சுளிக்காமல் நன்மையோடிருந்தான் தேவேந்திரன் சிந்தைகளித்து மகாபலியினிடத்திற்சொல்லி விடைவாங்கிக்கொண்டு வானுலகடைந்தான்.

இப்பால் மகாபலியானவன் இன்னுஞ் சிலநாட்டரித்திருந்த இடத்தைவிட்டு மலைப்பாம்புகள் மலிந்த இமையகிரிக்குச் சென்று அம்மலையின்குகையிற் பிரவேசித்து தபம்பண்ணினுன் இப்படிக்கிருக்க மேலுலத்தில் விஜயம்பெற்று பிரதாபனுயிக்கிற வெள்ளைவாரணன் அரசனுகிய மகாபலியை மறுபடியும் பார்க்கவேண்டுமென்று வந்து முன்னிருந்தயிடங்களெல்லாம்ஆராய்ந்து காணுமையால் துயர்கூர்ந்து பனிமலையைச்சார்ந்து மகாபலியைக்கண்டு ஒன்று மரியாதவனைப்போல் உருத்தெரியாமனின்று அரக்கன் மனது அரக்கென உறுதும்படிக்கு சுடச்சுடச்சொல்லுகின்றுன்.

ஏனையா இராக்கதராஜனே நவரத்தின கசிதமாயிருக்கப்பட்டதேவர்களையும் பொன்பூணணிந்த கொம்புகளுடைய யானைகளையும் வாயுவேகத்திலுமிஞ்சிய வாசிகளையும் சமுத்திரம்போலிருந்த சேனைகளையும் சூரியகிரணம்போற் சொலிக்கும் ரத்திஞபரணகேயூரமணிகுண்டல கிரீடங்களையும் வகித்து சமஸ்தகோடி தேவதைகளுஞ் சயசயவென்று கைகட்டிச் சேவிக்கத்தக்கதாக பரிவட்டணைகளுடன் ஆடம்பரமாய் மூன்றுலோக முதல்வனென்று பெருமிதம்பெற்று நிறைந்த கொலுமண்டபத்தில் சிம்மாசனமேறி சிங்கம்போல்வீரசக்கிரவர்த்தியாயிருந்த நீர் விருதாவாய் அப்பிரயோசனப்பட்டு இந்தப்பனிமலைச்சாரலில் குகைக்குட்புகுந்து கிட

க்கத்தக்கதாக பிரமனெழுதினுனே அடாபாவி ஐயோ வினையே யென்று பரிதாபப்பட்டான்.

இவன்கூறிய மொழியெல்லாம்கேட்டு தேவேந்திரனென்று தெரிந்து மகாபலிசினந்து ஓ இந்திரனே நெடுங்காலமாய்ப் பெரு வாழ்வுவாழ்ந்தபேர்களானுலும் அசாத்தியசபத்தை யடைந்தவீர ராளுலும் அழகு ஆண்மைபடைத்தவராலுைம் தெய்வபத்திஆசா ரியபத்தி திறம்தேவரானுலும் இவ்வுலகத்தில் ஆத்மகோடிப் ப டைக்கின்ற அயனுைலும் அவனைப் பெற்றவனுைலும் கிஞ்சித் துக்காலம் போகமும் சிறிதுநாள் யோகமும் கொஞ்சதினம்போக முெம் பின்னுள் சமத்தும் பன்னுள்விபத்து மடைந்து பின்னுஞ் சிலபொழுதில் எல்லாவற்றையுமிழந்து நிறுவகிக்கமாட்டாமல் து க்கப்பட்டு தன்னைப்பணிவாரைத்தான் போய்பணிந்து தரித்திரப் படுவது கர்மபூமியின் சுபாவம் இதுதான் இகத்தின்லாபம் நல்வி னை தீவினை யிரண்டினுலும் வரும்படியாகிய பேரின்பரசத்தை அ னுபவிப்பதற்கு எடுத்தது இந்தத்தேகம் இதை நீயறியமாட்டா யா பேச்சிலும் எச்சிலுமிருந்தவனே நீ பூர்வத்தில் சகல சம்பத் தையும் போக்கடித்துக்கொண்டு சத்துருவினுல் மெத்தவருத்தப் படவில்லையோ எழுபதினுயிரம் தேவவருஷம் சிகைழியில் மூங்கி லென்னவடிவெடுத்து புதர்மூடி புத்திகெட்டு பயந்திருக்கவில்லை யோ இமயகிரிச்சாரலில் சலநிறைந்த தடாகத்தில் தாமரைத்தண் டில் அணுருபம்படைத்து அலைச்சலடைந்தாயில்லையோ இத்தன் மையாய் எத்தனை கேடுக்கு ஈடுபட்ட நீ தன்னை மறந்துபேசினுப் இது உலகமுறைமையென்றெண்ணுமல் எம்மைப் பழிப்பதற்கி சைந்தையே எந்த காலத்திலும் எது அனுபவிக்கவேண்டுமோ அ தை வந்துதீரும் உறுதிபெற்ற உற்றமர்கள் கற்றகல்வியின் திறத் தால் இதற்குக்கவலைப்படுவார்களோ கோடையினுல்தீஞ்சுகாஞ்ச பயிரானது மறுபடியும் மழையினுல் துளிர்த்துத் தளிர்த்துக்காய் க்குமல்லவா சிலநாளிருட்டும் சிலநாள் நிலவுமல்லவா செல்வம் இல்லாதபோது துக்கப்படுகிறதும்இருக்கிறபோது சந்தோஷப்படு கிறதும் ஒரு அறிவா.

அப்பேர்ப்பட்டவர்கள் சற்றில் மகிழ்ந்துதயிரிலழுகுபார்க்கு கின்ற அறிவில்லாதவர்கள் இதற்கொரு திருஷ்டாந்தங்கேளும் காற்றினுலே நெருப்பு பிரபலமாகின்றது. அந்தக் காற்றினுலே லே அந்நெருப்பு அவிந்துபோகின்றது. நெருப்பினுலே நீருண்டா

கின்றது. நீரினலே மண்ணுண்டாகின்றது. மண்ணினலேயே நீர் மறைந்துபோகின்றது. சகலமும் நீரினற்பிழைப்பன ஓர் சலவெள்ளத்தாற் சகலமு நாசமாவன. சூரியனல் தாமரைப்போது விரிகிறது அந்தச் சூரியனலேயே மீட்டும் கரிந்துவிடுகிறது. இவை யோசிக்குமிடத்து உடலிலேயே பகையுண்டென்பது உனக்குத் தெரியவில்லையா? எல்லாங் காலத்திற்குத் தகுந்தபடி நடப்பதற்குக் கர்த்திருக்கும் நல்லதும்-பொல்லாதும்-நாம் தேடிக்கொண்டதல்ல. ஒன்றை யுண்டாக்கிக் கொள்வதற்கும், உண்டானதை விலக்குவதற்கும், ஒருவருக்கும் அதிகாரமில்லை, ஆதலால் - நான் அப்படியாக அனுபவிக்கவேண்டிய காலம் அது. இப்படியாகக் குகைக்குட்புகுந்து இருக்கும்படியான காலமிது. என்னுடை நல்வினைக்காலத்தில் என் கண்ணிலகப்படாமல் ஒளித்துக்கொண்டிருந்தனையன்றோ? அந்தக்காலத்தையும் இப்போது தேவராஜனய்-வச்சிராயுதபாணியாய் - முத்தாரம் பூண்டு எனக்கு முன்னின்று விஸ்தாரம்பேசுகின்றனையன்றோ? இந்தக் காலத்தையும், நீயே யெண்ணிப் பார்த்துக்கொள்ளலாம். ஓ மேகவாகன! எதிர்காலத்தில் ஒருவனுக்கு ஈஸ்வரன் என்னென்ன அதிசயங்காட்டயிருக்கின்றானே? அதையறிந்து சொல்லுகிறதற்கு ஆருடையதாம்? என்றுசொல்லிய மகாபலிச் சக்கிரவர்த்தியின் மனேதிடத்தையும்-தயிரியத்தையும்-கௌரவத்தையும் - இந்திரன் பார்த்து. மறுமொழிசொல்ல வாயில்லாதவனய் நாணி, ஓ சக்கிரவர்த்தியே நல்லது நான்போய்வருகிறேனென்று மகாதனவன் செலவு பெற்றுக்கொண்டு விண்ணகரத்திற்குப்போய் போகபாக்கியத்திலிருந்து பின்னும்பன்னட்போனபிற்பாடு பூலோகத்திற்குவந்து அவரவர்கள் நினைத்தகிரியைகளைத் தரப்பட்ட கங்காநதியில் ஸ்தானம்பண்ணி கரையருகிலிருந்து ஜபஞ்செய்யுஞ்சமயத்தில் சத்தியலோகவாசியான பிர்ம்மாவுக்குச் சமானமாகிய நாரதமுனிவர், அந்தபாகிரதியில் ஸ்தானம்பண்ணி ஜபம் கைகூடிய தேவேந்திரனுக்கருகில்வந்தார் அந்தவேளையில் சூரியப்பிரகாசம்போன்றதேரிலேறிக்கொண்டு திவ்யசொரூப சுந்தர விம்பந்தோன்ற அம்மன் வந்து எதிரில்நின்றனள் தேவேந்திரனும் நாரதரும் சீக்கிறமெழுந்து தீர்க்க தெண்டமாய்விழுந்து இருவருங்கைகூப்பி திவ்யகாட்சியே ஜகத்திற்சாட்சியே ஜீவகாருணியே தேவரீருடைய பெயரென்ன சொல்லம்மா வென்னனும் அன்னமாகிய கன்னிசொல்லு

கின்றாள் நான் மகாலட்சுமி இதுவரையிலும் மகாபலிராஜனிடத்தினின்றும் வெளிப்பட்டு உன்னிடத்திலிருக்கச் சம்மதித்துஅபிக்கமானவளன்றோ? என்று தேவேந்திரனைப் பார்த்துச் சொல்லினள். அவள்வார்த்தையைக்கேட்ட நாரதனும் நாகநாதனும் பிரதக்ஷணம்பண்ணி நமஸ்கரித்து ஓமகாதேவி அகிலாண்டநாயகிஓங்காரி பரப்பிர்மசொரூபி நிர்வகி நிராகாரி நிற்குணி நிர்ப்பலாட்சி சகுணி சத்குணி சௌந்தரி ஜீவரட்சகி ஜீவசாட்சி பொற்கமலவாசி-பிரதாப விசுவாசி-பரமபததேசிகலா முகசுந்தரகேஷ்ணு விசிநேசி-கேசவப்பிரியை-நாராயணி கிருபாசமுத்திரி-கருணைக்கண்காட்சி காமணாட்சி கலன்றவ்வி தீனதயாபரி பக்தவற்சலிவேதவேதாந்த முதல்வி மெய்ப்பொருட்டலைவியென்று அநேகவிதமாகத் தோத்திரஞ்சொல்லி அஞ்சலித்து அம்மணி நீர் இராக்கதனைவிட்டு நீங்கியதற்குக் காரணமென்னவென்ன அவ்விருவருக்குஞ்சொல்லுகின்றாள்.

ஓ நாரதனே!ஓநான்மருப்பியானையூர்த்தியே என்சங்கதி நீங்களறியமாட்டீர்களா எவரொருவர் தீவினைசெய்கிறார்களோ அவர்களிடத்தில் நான் அரைக்கணப்போதும் பொருந்தேனே தீவினையாவதென்னவென்னில் கொடும்பாவம் அதாவது சூரியோதயம் அஸ்தமிக்கும்போதும் தூங்குவது வேதத்தை தெய்வத்தை விதியைவிலக்கி ஆசாரத்தை ஆசாரியை பூசாவிதியை பெரியோர்தவத்தை புண்ணியத்தைவிரதத்தை நோன்பை தாய்தந்தையை தமயனை தம்பியை தமயரை தருமபத்தினியை எளியாரை இன்ன முதலிய நன்மைகளை இகழ்ந்து பேசுவது சுயஸ்திரீயைத் துக்கப்படவைத்து பரஸ்திரீயைப் பக்கத்தில்வைப்பது ஞாயந்தப்பி அநியாயநடப்பது லஞ்சம்பரிதானத்திற் கிச்சிப்பது பொய்ச்சாட்சி பேசுவது ஒருவர்சொத்தை அபகரித்து மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாய் வசனிப்பது வஞ்சிப்பது நன்றிகொன்றுவது ஜீவயிம்சைபண்ணுவது நிரவிசாரியாமற் றெண்டிப்பது நிந்திப்பது குடும்பதோஷங்கூறுவது அபாண்டம்போடுவது பயனில்லா வார்த்தைபகருகிறது கோபத்தினாற் சீருவது சோம்பலாவது குளியாது முழுகாது அசுசியாயிருப்பது சூதாடுவது கள்ளுண்பது கயப்புச்சேர்ப்பது நிந்திப்பதே தொழிலாயிருப்பது தெய்வமிகழ்வது இன்பமுள்ள நன்மைகளுக்கிடராகிய தின்மைசெய்கின்ற நலமிலாரிடத்தில் நானிருக்கமாட்டேன்.

ஒருகுணமேனும் உத்தமமாயிருந்தால் அந்தயிடத்தில் சந்துரோமிருக்க மனஞ்சம்மதிக்கும் அவர்களாரென்னில் விருந்தினரைப்பரிந்து பூசைபுரிந்து அமுதூட்டி உபசரிப்போரிடத்தும் துறந்தார் இறந்தார் இவர்கள் கடமையைச்சோராமற் செய்பவரிடத்தும் உண்மையான ஆசாரபராளிடத்தும் கடிந்துரையாத கருணையோரிடத்தும் குளிர்ந்த முகமுடையோரிடத்தும் எல்லாருக்கு நல்லவரென்றிருப்போரிடத்தும் நித்தியமான சத்தியைகீர்த்தியை நிலைநாட்டுவோரிடத்தும் தெய்வபக்தி ஆசாரியபக்தி செலுத்துவோரிடத்தும் தந்தையை நிந்தியாதவரிடத்தும் கோபி சந்தனம் பூதிநாமம்பற்றியபேரிடத்தும் தருமமுள்ளபேரிடத்தும் துளசிவில்வத்தினிடத்து இலட்சணமமைந்த யானை குதிரை பசு ரிஷபம் இப்பேர்ப்பட்ட இடத்தும் அன்னீதியில்லாத ஆலயத்திடத்தும் என்னுயகனது இர்தய ஸ்தானத்தையும் பார்க்கிலும் இன்பமாயிருப்பேன்.

இன்னும் சத்திரம் சாவடி தடம் மடம் சாலை சோலை தண்ணீர்ப்பந்தல் துரவு ஏரிகுளம் ஆறு ஊறு கயம் தாமரைத்தடாகம் இவ்விடத்திலும் இவைகளை யேர்ப்படுத்தப்பட்ட பேர்களிடத்திலும் குலாச்சார முக்கியம் எல்லா ஆசாரத்திற்கு மேலானது அவைகளையும் குலமுறைகளையுந் தப்பாமல் நடத்துகிறவர்களிடத்தும் நானீங்காதிருப்பேன் என்னையிட்டு அவர்களும் பிரியமாயிருப்பார்கள் என்று உருக்குமணி தேவியாருரைத்தனள், அம்மொழியை நாரதனும் தேவேந்திரனும் கேட்டு அற்புதப்பட்டு, ஓ: அம்மா! நல்லது; மகாபாவியா யிருப்பவன் மகாராஜனு யிருக்கின்றான். அவனடந்ததெல்லாம் பாவமாயும் அக்கிரமமாயுமிருக்க, ஏதாகிலும் ஒரு நற்காரியஞ்செய்திருந்தால் மற்றப் பொல்லாங்கையெல்லா மறந்து அவனிடத்திற்குப் போவீரோ? போகாமலிருப்பீரோ? என்று வினவிப் போற்றினார்கள். அதற்குச் சுகந்தபரிமள மலர்மாலைசூடிய மகாலட்சுமி குறுநகை விளைத்துச் சொல்லுகின்றாள்.

ஓ அறிவுடையவர்களே! குற்ற மூன்றுபாகமுங் குணமொருபாகமேனுமிருந்தால், அவர்களிடத்திலும் போயிருப்பேன். எப்படி போயிருப்பேனென்றால் தீயின்பேரிலு முள்ளின்பேரிலுந் தேகநடுங்கிச் செல்பவர்போற் சிடசிடவென்று சிறிதுநாள் நின்று ஏதாகிலுமொரு முகாந்திரத்தை நாட்டி, அவர்கட்கிசையக்காட்

டி மறைந்தபோவேன். நற்செய்கையாகிய நல்வினை முன்னுபங்
குந் துற்செய்கையாகிய தீவினை ஒருபங்கு மிருந்தால், அவர்களி
டத்தில் நான்போயணுகி மேலுமேலு நல்வினைதேடச்செய்த,
தீவினையைமறைத்து, அவர்களை நாளுக்குநாள் விர்த்தியாக்கி,
நன்னடத்தை-நற்றருமம்-நற்செய்கை-நற்றவம்-நற்புத்திரன்-நற்
பெண்டீர்-இவை யெல்லாவற்றையுஞ்சேர்த்து, நானும் விளையா
டிக்கொண்டிருப்பேன். அவர்களே கன்மானுபவத்தால் அகந்தை
அக்கிரமஞ்செய்யப் பிரவேசிப்பாராகில், மகிழ்ச்சியின்படியே இக
ழ்ச்சிவிளைத்து, நா னீங்கிப்போவேன். அந்த அகந்தையும் அக்கிர
மங்களு மறைந்து நன்மார்க்கவழிவந்தால்,நான் துணையாயிருந்து
கைதூக்கிவிடுவேன். ஒருவேளை தெரிந்துந்தெரியாமற் குற்றங்
கள்செய்தால், நானிருக்கிறவரைக்கும் அக்குற்றங்களை விசார
ணைக்குக்கொண்டுவராமல் வெகுபேர் சந்தோஷிக்கும்படி விடுத்
து, நானும் பொறுத்துக்கொண்டே யிருப்பேன். புண்ணியவான்
களிடத்தி லிருப்பதிலெனக்குப் பூச்சியமுண்டு. அவாள்செய்கிற
சிறுகுற்றத்தை மன்னிப்பது என்கடமை. அதிகப்பட்டால் எல்
லாவற்றையும் ஒரேதரமாகச் சாய்த்துவிட்டு ஓடிப்போவேன்.
என்றியம்பினள். அந்தவார்த்தையை இந்திரனு நாரதருங்கேட்
டுச் சந்தோஷமுற்று, நல்லது தாயே! இப்போது நீர்வந்தது என
னத்திற்கு? எவ்விடத்திற்குப் போகின்றீர்? எந்த யெளியோனை
ஏந்தலாகச்செய்யப் புறப்பட்டீர்? ஓ உத்தமி! எங்கட்குண்மை
யாகச் சொல்லுமென்று பணிந்தார்கள். அதற்கிலக்குமி தேவேந்
திரனைப்பார்த்து, ஓ சசிகேள்வனே! உன்னிடத்தி லிருக்கும்படி
யாக முன்னமே அயிக்கமாயினேன். இப்போதிப் பாகீரதிக்கண்
செய்த உன்செபத்திற்கு மகிழ்ந்து தெரிசனமாயினேன். என்று
தனது சுயம் பிரகாசத்தைக்காட்டி உடனேமறைந்து, ஓர் பரம
அணுவடிவமெடுத்து அவ்விந்திரனுடலிற்றானே புகுந்து மகிழ்ந்
திருந்தனள். (அன்றுமுதல் தேவேந்திரன் தருமவரம்பென்னும்
விருட்சத்திநிழலைத் தாண்டாது குருநெரியும் அறநெரியும் பரநெ
யுங் கடைப்பிடித்து பரமசாம்ராச்சியத்துடன் வாழ்ந்திருந்தான்.)

நாரதர்-இந்திரனைத்தாண்டியது

முற்றிற்று.

---

### நாரதமுனிவர்
### தேவேந்திரனுக்கு ஆத்மமூர்த்தியை

# சுட்டிக் காட்டியது.

முன்னொரு காலத்தில் நாரதர் தேவேந்திரனிடத்திற்குப் போனார். அவனிவரைக்கண்டு எதிர்கொண்டு பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, ஓராசனத்திலிருத்திச் சோடசோபசார பூசைகள் புரிந்து, சுவாமி! இங்கு தேவரீர் எழுந்தருளுவதற்கு அடியேன் என்னதவமிழைத்தேன்? நானின்று பிழைத்தேன்.என்று தோத்திரம் பண்ணி ஆசீர்வசனம் பெற்றுக்கொண்டு நின்றான். அவனை நாரதமுனிவர் சிங்காசனத்தி லுட்காரச்சொல்லி, ஒருவருக்கொருவர் க்ஷேமவிசாரணைசெய்து கொண்டிருந்தனர். அப்போது இந்திரன்-ஐயா நாரதரே! பூமியில் அற்புதங்களேதாகிலு முண்டோ? அப்படிக்குண்டானாற் சொல்லுமென்று தூண்டினான். அந்த இந்திரனை நாரதர்பார்த்துச் சொல்லுகின்றார். ஓ வச்சிராயுதனே! உலகத்தாரைக் கடைத்தேற்றி வைப்பதற்காக வந்த கங்கைக்கரையிற் பத்மநகரமென்றொரு பட்டணம். அதிற் பிருகுவென்னும் பிராமணனொருவன் சகலகோடி பிராணிகளையுந் தன்னுயிர்போற் பார்க்கப்பட்ட தயாரசகுண முடையவன். நித்தியசத்திய விரதன் இயாவரும் நல்லவனென்று கொண்டாடப் பெயர்பெற்றவன். கோபத்தைக்கோபித்தவன் உத்தமஸ்திரீயை வேட்டவன். பெருமையான பிள்ளைகளைப்பெற்றவன் வந்தவிருந்துக்குபசரித்து, இனிமேல் வரப்போகிற விருந்துக்குஎதிர் பார்த்திருப்பவன். பாக்கியத்திலும்-யோக்கியத்திலும்-சிலாக்கியமானவன். நோயற்றவாழ்வுடையவன் இப்படிக்கொன்றிலொன்று குறைவில்லாமல் நிறைவாகவாழ்ந்து வருகிறநாளையில், தருமசாஸ்திரங்களையு நீதிசாஸ்திரங்களையும்படித்து,அவ்வவற்றி லுட்பாருட்பங்களைவடித்து, சகல ரகசியங்களையுந் தேர்ந்து தெளிந்து, அநேகதருமங்களிற் பரமதருமமெதுவென்றறியவேண்டுமென்று மேலுமேலுஞ் சாஸ்திர விசாரணைசெய்து, மேலோராகிய மெய்யறிவோர்களையுங்கேட்டு, ஒருவருந் தெரியச்சொல்லாமை

யாத் கிரகஸ்தாச் சிரமத்திலேயே வாழ்ந்துவந்தான். இப்படி நெடுநாள் கடந்தபிற்பாடு ஒருநாளவனிடத்திற் சவனகரிஷீஸ்வரர் வந்தார்.

அவரை யவ்வந்தணன்கண்டு வணங்கிப் புட்பார்ச்சனை புரிந்து, அன்னவாகனக்கடவுளுக் கொப்பானவரே வாருமென்று உபசரித்து போசனமுண்பித்து,அவரால் மங்களாசனம்பெற்று'சுவாமி! தரு ங்களில் மேலான தருமமென்ன? அதை யெனக்குத் தெரிவிக்கவேண்டுந் தேவனேயென்று சிந்தித்தான். அதற்குச் சவனகமுனிவர் சொல்லுகிறார். அப்பா! நீகேட்ட தருமத்தைப் பற்றிப் பலநூல்களும் பலவாறுகப் பேசியிருக்கின்றன. உலகத்திற் சிறிதுபேர் சத்தியமென்றும், சிலர் தயாரசமென்றும், சிலர் உபசாரமென்றும், சிலர் வேதவிதியாகிய ஆச்சிரமங்களென்றும். சிலர் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள்ளும் புறம்புமொத்திருக்கின்ற உண்மைப்பொருளெதுவோ? அது வென்றும் பேசுவார்கள். அப்படிக்கிருப்பதால், தருமங்களில் இன்னது மேலாகிய தருமமென்று விளம்புதற்கு நான் பாத்திரனல்ல. ஆனலுங் குற்றமில்லாத நற்றவங்களைச்செய்கின்ற நைமிசாரணியத்திற்குப் பக்கத்திற் கோமதியென்னுந் தீர்த்தக்கரைக்கடுத்த பத்மதடாகமென்னு நகரமுளது, அதிற் பத்மனென்னும் பேர்பூண்ட மகத்துவமுள்ள சர்ப்பராஜன் தரைத்தனம் பண்ணிக்கொண்டிருக்கின்றுர். அவர் (இல்லறமல்லது நல்லறமல்ல.) என்னுஞ் சுருதிவாக்கியத்தைப்பிடித்து, அதற்குவேண்டிய கருவிநூல்களெல்லாம் படித்து. கிரகஸ்தாச்சிரமத்தைக் கிரமமாய் நடத்திவருகின்றுர், மகத்தாகிய தருமசொரூபி நித்தியப் பிரமாணத்திலே யிருக்கப்பட்டவர். ஆநந்தசமுத்திரத்தை கண்டிருக்கப்பட்ட பேர்களுக்கெல்லாம் புண்ணியதருமங்களை விரித்துரைக்கப்பட்டவர். நல்ல மகாத்மாக்கள்-மகாதபோநிதிகள்-பிதுர்க்கள்-இவர் முதலியபேர்களுக்குப் பூசைபண்ணப்பட்டவர் அவருடையபெருமையையொருவராலும் அளவிட்டுச் சொல்லப்படாது. அவருடைய ரூபஞ்சற்பமென்று நினையாமல், நீ யவரிடத்திற்குப்போய் கேட்கவேண்டிய சந்தேகங்களைக்கேட்டு உண்மையறிந்துகொண்டு வரலாம். என்று புகன்று தன்னுச்ச்ரமத்திற்கு ரிஷீஸ்வரர்போயினர்.

அவர்போய்விட்ட வுடனே பிருகுவென்னும் பிராமணனுக்கு ஆசையும் அன்புமேலிட்டு, பத்மனென்னும் பாக்கியவானைப்

பார்க்கவேண்டுமென்னும் பத்திமேலாகி, தன்னுடைய பெண்சாதி-பிள்ளை-பந்து-மித்திராள்-இவாள் யாவரையுங்கூட்டி நல்லவார்த்தைசொல்லி, இந்த வர்த்தமானங்களையுந் தெரிவித்து அவர்களிடத்திற் சந்தோஷமாக உத்தரம்பெற்றுக்கொண்டு, மகாரிஷி கூறிய அடையாளப்படிக்குத் தேடிச்சென்றான். இவன் அவன் வீட்டுக்குப போனபோது அந்தப்புண்ணியனாகியபதுமன் வீட்டிலில்லாமல் அப்பாற்போயிருந்தபடியால், அந்த நாகராஜனுடைய பெண்சாதியாகிய தருமசீலியென்பவள் இந்தப் பிராமணனுக்கெதிரில்வந்து பாதபூசைபண்ணி, அர்க்கியபாத்திய ஆசமன்யமுங் கொடுத்து, வீட்டுக்குளழைத்துச்சென்று, ஓ ஆண்டவனே! தேவரீர் வந்தகாரியம் யாதோ? அதனை யடியாளுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தாள். அந்தப் புண்ணிய குணவதிசெய்த உபசாரத்தினால் அவள் புருஷன் இன்னிலையுடையவனென்றும், அவர்களின் இல்லறதருமமு நல்லறமாமென்று நிதானித்து. வேதங்களையாராய்ந்த வேதியன் மிகப்பயந்து வெருவாய் நயந்து ஓ அம்மணி! சில சந்தேகங்களை உமதுநாயகனால், அறிந்து கொள்ளவேண்டிவந்தேனென்றான். அதுகேட்ட மாதுசொல்லுகிறாள். ஐயரே! என்கணவர் வாரிசநண்பனாகியசூரியபகவானிடத்திற்குப்போயிருக்கின்றனர். அவர் வருவதற்குளெட்டுநாள் செல்லும் என்று அதிகபத்தியும் அன்பும் பாராட்டிச்சொன்னாள். இந்தப் பிராமணனைக்கேட்டு, அவரப்படியே வரட்டும். நானவர்வரும் வழியிற் காத்திருந்து அழைத்துக்கொண்டு வருகிறேன். அல்லது அவர் வந்தபிற்பாடு வருகிறேன். என்று மகாபதிவிரதையாகிய மடமாதுக்குச் சொல்லிப்போட்டு, அவாள் வீட்டைவிட்டுப்புறப்பட்டு அவசரமாகநடந்து, அவர் வருகிற வழியிலிருந்து, அந்த மகானுபாவர் வந்து தரிசனங் கொடுக்கிறவரைக்கும் உபவாசவிரதமிழைப்போமென்று ஆறுநாளிருந்தார்.

அதை யந்த உத்தமியறிந்து, இந்தப்பிராமணனிடத்தில் வந்து, ஓ கர்த்தனே! ஓ நான்குவேதமுங் கரைகண்டிருக்கிற நாயகத்தூய்மைவாய்ந்த நாதனே! அடியாளுக்கு அன்பாகிய நாயகன் ஆக்ஞையிட்டிருப்பதாஎன்னவெனில், நம்மிட ஆச்சிரமத்திற்கு யாவரேனும் பெரியவர்கள் வந்தால் அவாளுக்குச் சோடசோபசாரம் பண்ணி, அவர்களிஷ்டப்படிக்கு அன்னங்கொடுக்கச் சொல்லிப்போயிருக்கின்றார். அப்படிக்கிருக்க - தேவரீர் இவிடத்

திற் கெழுந்தருளியும், அமுதுகொள்ளாமல் உபவாசமாயிருந்தால் முறைமையாகாது மேலும்-நாயகனல் எனக்குக்குற்றம்வந்து சம்பவிக்கும். இதல்லாமலும் எங்களுடைய இல்லறதருமமோம முங்கெட்டுப்போம். நானுநாயகனு நரகத்திற்கிடமாவோம். ஆதலால்-அடியாள் அன்னம் எடுப்பித்துக்கொண்டு இவ்விடத்திற்கு வருகிறேன். தேவரிருக்கு இஷ்டமானமட்டும் பிட்சையேற்றுக்கொண்டு ரட்சித்து எங்களைக் கடைத்தேற்றவேண்டும். ஓ கண்ணருணிறைந்த கற்பகமே! என்று பலவாறுகூறித் தன்னுடைய தருமபத்தினிக்கும் பத்தத்தனையாய் வேண்டிப்பணிந்துஉபசரித்தாள். அதற்கந்தப் பிராமணன்-ஓ அருந்ததியினுந் திருந்திப் பொருந்திப் பெருந்திருவனைய சீரும்பெற்ற, பெண்ணுயகமே! உமது புருஷ னெங்கேயென்று கேட்டபோது சூரியனிடத்திற் குப்போ யிருக்கின்றாரென்றும், வருவதற்கு ஒருவாரம் பிடிக்குமென்றும் வசனத்தீர், அப்போதே அவரைக் காணுகிறபரியந்தம் புசிப்பதில்லை யென்று சங்கல்பம் பண்ணிக்கொண்டு உபவாசமிருக்கின்றேன், அந்தவிரதங்கெட உமது வார்த்தைக்கு உடன்படேன் அன்னமும் அருந்தேன் உம்முடையகாதலன்எட்டாநாள் வராவிட்டால், ஒன்பதாநாளுதயமுதற்கொண்டு உண்கிறேன். இதனல் உங்கள் விரதத்திற்கொரு பங்கமில்லை, உங்களுடைய நியமம் இயமயோகத்தின் பலனைப்பெறும் உங்களுக்கொரு தீமையுஞ்சேராது. உங்கள் வாய்மையுஞ் சோராது, வல்வினையும்வாராது. தாயே மனோன்மணி! என்பேரில் மனஸ்தாபமில்லாமற் சுகமாய் நீர்போமென்று சாற்றினர். அவரது மொழியைக்கேட்ட நாகராஜாவின் நாயகியாகிய நாககன்னி தன்வளவுக் குவந்துவிட்டாள்.

இப்பா லொருவாரங்கடந்தபிற்பாடு சூரிய பகவானிடத்திற் சென்றிருந்த சுகுணவானன நாகராஜன்வந்தான். ஆச்சிரமத்திலிருந்த பதிவிரதை அவருக்கெதிரோடிச்சென்று பாதபூசைமுதலிய உபசாரங்கள் பண்ணி, சிங்காசனத்திலிருக்கச்செய்து,சேடர் சேடியர்களைக்கொண்டு ஆலவட்டம்-சாமரம்-விசிறி-சாந்தாற்றி-இவைமுதலியவற்றால் இளைப்பகற்றி!அவருக்குமுன்னின்று,சுவாமி அடியாள் விண்ணப்பமொன்றுளது. தேவரீர் சூரியமண்டலம் போ யிருந்தபோது இவ்விடத்திற்குப் பிருகுவென்னும் பெரியவர்வந்தார் உபசரித்தேன் தங்களைவிசாரித்தார் செங்கதிரோனி

டத்திற்குச் சென்றிருக்கின்றா ரென்றேன். எப்போதிங்ஙனம் வருவாரென்றார். ஒருவாரத்தில் வருவாரென்றேன் அப்படியானால் அவர்வருகிறவரைக்கு நான் உபாசவிரதம் பூண்பேனென்று தேவரீர் வரும்வழியிற் றவமுற்றிருந்தனர். இச்செய்தியறிந்த அடியாள்சென்று அவர்திருவடியிற் பணிந்து அநேகவிதத்திற் றெரிவித்துத்தேற்றியபோதுந் தனது திரம்விடாம லிருந்தனரென்று செப்பினாள். அவரம்மொழிகேட்ட அப்பொழுதே கொழுந்துவிட்டெரியுங் கொப்பரையில் விழுந்த புழுப்போற்பொரிந்து தான்கொண்டிருக்கும் இளப்பைப் பாராட்டாமலெழுந்து, அந்தப் பிருகுவென்பவரிடத்திற்குச்சென்று, ஐயா தேடக்கிடையாப்பெருமானே! நாயேயனையபேயனை நாடிவந்தகாரணம்யாதோ? என் குடிசையி லடிபெயர்த் தருளப்பெற்ற தவமென்னமோ? தேவரீர் சீரடிவருந்தப்பெற்ற செயலெதுவோ? என்று முகமன்கூறி, சுவாமி! தேவரீர்வந்தது இன்னகாரியமென்று வழங்கினால் அந்தகாரியத்தை க்ஷணநேரத்திற் சாக்கிரதை பண்ணமாட்டுவே னென்று சாற்றினான் அதுகேட்ட பிறப்பிறப்பற்ற தவப்பலத்தையுடைய அந்தணன் அவனைப்பார்த்து ஓ நாகராஜனே! நான் வந்தகாரியத்தைக் குறித்துப் பிற்பாடுபேசுகிறேன் நீர் சூரியமண்டலத்திற்குப் போய்வந்த துரிதமென்ன? அம்மண்டலச்சிறப்பும் விசாலப் பரப்பும், நேர்மையுஞ் சீர்மையும் அதிசயமும் சூரியனிருக்கின்ற ஆசாரமும், சம்பிரமமும் நீர் வார்த்தையாடியவகையும், அங்குள்ள விரோத அதிசயங்களும்இன்னுமுண்டான சகலவிந்தைகளையு நீர்கண்டபடியே உரைக்கவேண்டுமென்று கேட்க, அவனுடைய செவியில் தேவாமிர்தஞ் சொரிவதுபோல் நாகராஜன் செப்பலுற்றனன்.

ஓ பிர்ம்மவித்தாகிய தேவனே! கேளும் சூரியமண்டலத்தில் முரசு-கறடிப்பறை-குடமுழவு-மல்லரி-துத்தாரி-பூரி-டமாரம்எக்காளை-தாரை-வீரசின்னம்-தப்பட்டை-தவுண்டை-மேளம்-இவை முதலிய சகல வாத்தியங்களுஞ் சப்தமேகம்போல் முழங்கும் ஒலியொருபக்கம் தேவஸ்திரிகள்-கந்திருவப் பெண்கள்-யக்ஷகன்னியர்கள்-இவர் யாவருஞ்சதி சுதி தாள மேளங்களுடன் பரதமாடுகின்ற பரிசொருபக்கம் பேரறிவினுயர்ந்தபெரியோர்களும்-மனவுறுதியுடைய மாதவர்களும்கரையிறந்தவேதாகமங்களைக் கழறுகிறசரிதமொருபக்கம் ஸ்மிர்தி-இதிஹாசம் - பஞ்சலக்ஷணபாவம்-

தருக்கம்-மீமாம்சம் அறுபத்துநான்குகலைக்ஞானம்-என்னுமிவைகளை அப்பியாசம்பண்ணுகிற ஆரவாரம் ஒருபக்கம்முப்பத்துமுக்கோடி தேவர்களும்-நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும்-சகலசாதியரு-சற்குலவேதியரு நந்தோத்திரஞ் செய்கின்ற துவனியொரு பக்கம் தவசிகளும்-முனிவர்களும்-வேதமந்திரம் ஓதுகின்ற கீதநாதமொருபக்கம், தரிசிக்கின்றவர்களாலுந் துதிக்கின்றவர்களாலுமுண்டாகுஞ் சந்தடியொருபக்கம் ஆலவட்டங்கள் - சாமரங்கள்-சத்திரங்கள்-மயிற்பீலிகள்-குஞ்சங்கள்-பிஞ்சங்கள் -சுருட்டிகள்-முத்துக்குடைகள்-இவைகளாலுபசரிக்கின்ற ஒலியொரு பக்கம், அவ்வவர்கள் பணியுந்தோறு மளித்தருள்கின்ற ஆசீர்வசன ஆர்ப்பொருபக்கம் அஷ்டமங்கலம்-லாலி-சுபமங்களம்-இவைமுதலிய ஆரவாரம் ஒருபக்கம் பராக்கு கட்டியம்-எச்சரிகை - இவை முதலான உபசார அவசரங்களொருபக்கம் இன்னம் இவைமுதலிய வநேகவைபவங்களுடன்உஷாதேவிபிரத்யுஷாதேவி-சாயாதேவி சமேதனாய். ஆயிரங்கிரணத்துட னிருக்கப்பட்ட திவ்வியமான தேவநிர்மாணஜோதிமணியை மார்பிற் றரித்துக்கொண்டு, நவரத்நகசித சிங்காதனத்தின்பேரிலிருக்கப்பட்ட சூரியபகவான் தனதுபிரபையுடன் கொலுவீற்றிருக்கின்றார். அவர்சப்தமாவென்னும் பரிகள்பூட்டிய ஒற்றையாழித் தேரில் அருணன் சாரத்தியஞ் செய்ய வெழுந்தருளி. மனவேக வாயுவேகமாய் மகமேருவைப் பிரதட்சணஞ்செய்து வையகத்தார் வாணாளையளந்துகட்டு மகாமூர்த்தியா யிருக்கின்றவர். அவருடையகிருபையினால் மழைபெய்கிறதும் தானியாதிகள் மலிகிறதும் வருஷம்-மாசம்-வாரம்-திதி நட்சத்திரம்-யோகம்-கரணம்-உத்தமம்-மத்திமம்-அதமம் - ஆகிய விவைகள் நடப்பதும், சராசரங்களுண்டாய்த் தழைவதும், சாத்விகம்-இராசதம்-தாமதம்-என்னுமுக்குணம் விளைவதும்-சிருஷ்டி திதி-சம்மாரம்-என்னுமுத்தொழி லுண்டாவதும், இத்தொழில்களுக்குரிய பிர்மா-விஷ்ணு-உருத்திரன் ஆகிய மூவரும் அந்தச் சூரியபகவானுடைய ஒளிக்குளொளியாய் உட்கலந்திருப்பதும் என்போலிகளாற் சொல்லிமுடிவதோ? இம் மும்மூர்த்திகளுக்குஞ் சூரியனைவிட வேறுகடருந் தெய்வங்களுமுண்டோ?

இப்பேர்ப்பட்ட சூரியபகவான் முக்கோடிதேவர்கள் அர்க்கியங்கொடுத்துச் சுவர்னபுஷ்பம் பொழிய கருடனுடைய தமையனான அருணன் மெத்தவிசையுடன் விமானத்தைச் செலுத்த,

வேகசாகசத்துடன் சப்தமானடிக்க, அலைகடல்வளைந்தவுலகத்திற்கெல்லாங் கண்கண்ட தெய்வமாய்க் கொலுவில் வீற்றிருக்கின்றபோதுமிகுந்த ஜோதியுடன் ஒரு மகாபுருஷன் வந்தான். அவனுடைய பிரதாபமென்னவென்னில், தேவர்களைப்போல் திவ்விய தேகம்பெற்றவன். ஆரகேயூர மணிகுண்டல கிரீட பூஷணாலங்கிர்தன் திடகாத்திர வச்சிரதேக உச்சிதபலவான். அருணனுடைய காந்தியிலும் அதிகமானவன். அப்பேர்ப்பட்டவன் சூரியபகவானுடையகொலுமுகத்தில்வந்துநின்று, சிலாக்கியசாரமான தோத்திர வாக்கியங்களைச்சொன்னான். அதைக்கேட்ட சூரியன் ஆநந்தமுற்றிருக்க மறுபடியும்அந்தத் திவ்யபுருஷன் சகலகோடிரிஷீஸ்வரர் முதலாகிய பிரமதகணங்களெல்லாம்பணிந்து வணங்கித் தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கிற பருவத்தில், அந்தச் சூரியசோதியிற்புகுந்து உள்ளேகலந்து ஒன்றுபட்டுப்போனான் அதைக்கண்ட தேவர்களும் அஷ்டதிக்குப் பாலகருமுகமலர்ந்து அகமகிழ்ந்தார்கள். இந்த விந்தையை நானுங்கண்டு அற்புதமடைந்து, ஆயிரங்கிரணனையடுத்து, ஐயா! உம்மிடத்தில் ஒளியாய் வந்து உம்முட்புகுந்து ஒன்றிப்போன உத்தமாரோ? அவருடைய உண்மையைச் சொல்லவேண்டுமென்று உருத்திக்கேட்டேன் சூரியதேவன் என்பால்வைத்த அன்பினால் வண்டுமொய்க்குந் தேனிறைத் தாமரைமலர்மாலை குலுங்கநகைத்து என்பேரிற்கிருபைவகித்து மகத்துவமுமர்மமுமான ஓர் வசனத்தைச் சொல்லத்தொடங்கினார்.

ஓ நாகராஜனே! இப்போதென்னிற் கலந்தவர் தேவர்களினுஞ்சிறந்தவர் மெத்தநல்லவர் பூலோகத்தில் வேதமோதுகின்ற பிராமணர்களில் இவரும் ஒருகுட்டிப்பார்ப்பார். சகலகோடிதருமங்களும் ஒன்றைக்குறித்துச் செய்யாமல் நிராசையாய்ச் செய்யப்பட்டவர். குற்றமற்ற நிர்மல உதகம்போற் பற்றற்றிருப்பவர் தேகாபிமானமற்றவர். அவருக்கு ஸ்தூலபூததேகம் போய்விட்டது உடனே சூக்குமதேகத்திற் பிரவேசித்து என்னுடன் கலந்து பிரிவறப்பரவினர். இதுதான் இடரில்லாதமுத்தி இதன்றி வேறோரதிசயமில்லை. யாவனொருவன் ஆசாபாசத்திலகப்பட்டுக் கெட்டலையாமல் நிராசையுற்றிருக்கின்றானோ? அவனே பிறவிவேதைகடந்தவன் அவனே முத்தாத்மா. ஆசையுடனும் பற்றுடனுஞ்செய்கிற தருமமெல்லாம் பிறவிக்கேதுவாகும் அவாவி

ருக்கிறவரைக்குந் தவாப்பிறப்பு ஜனனமரண நீங்காது, ஆகையால் எல்லாத்தருமங்களிலுமுதன்மையான நிராசையோடிருந்து ஒருவழிப்பட்ட உண்மையோராதலால், சீக்கிரம் ஜனனமொழிந்தது. ஜனனமொழிந்த தல்லாமலும் என்னுடலிற்கலந்து ஜோதியோடு ஜோதியாய்ப் பரவிவிட்டார். என்று சூரியன்கூற யான் மகிழ்ந்து சந்தோஷமடைந்தேன் இதுநேற்றயதினஞ்சூரியனிடத்தில் நடந்த சமாச்சாரமென்று நாகராஜன்பேச, பிருகுவென்னும் பிராமணன்கேட்டு ஆனந்தத்திற்சிறந்து நாம் நினைத்துவந்தகருத்தின் சங்கையறத் தற்செயலாய் உண்மை வெளியாயது, நமது விரதமும பலித்தது, தருமசூட்சமுந் தெரிந்தது என்று நினைத்து அந்தநாகராஜனுக்கு உபசாரத்துடன் ஆசீர்வதித்து இதனைப் பேசுகின்றான்,

ஓ மகானுபாவரே! நான் வெகுநாளாய் முடிவான தருமம் அறியவேண்டுமென்று அநேகம் பெரியோர்களை உசாவினேன். ஒருவருஞ் சொல்லமாட்டாமற் சந்தேகத்தில்விட்டார்கள். ஒரு முனிபுங்கவரால் உம்முடையமகிமையைக்கேட்டு, இந்தரகசியத்தை உம்மால் தெரிந்துகொள்ளவேண்டுமென்று வந்த இடத்தில் நீரில்லாமற் போனபடியால் உம்மைக்காணுகிற பரியந்தம்உபவாசவிரதமிருந்து கண்டு, சூரிய லோகத்தில் நடந்த ஆச்சரிய சமாச்சாரங்களையுங்கேள்விப்பட்டு நான் கொண்டிருந்த சங்கைதீர்ந்து கிருதார்த்தனானேன். என்று அந்தணன்பேச அந்தச் சொல்லைக் கேட்ட நாகராசன் அவனைவணங்கி வழிபட்டு உபசாரங்கள்செய்து சுவாமி! தேவரீர் நிரம்பியபசியும்இளைப்புமாயிருக்கின்றீர் அடியேனை நாடிவந்து ஆறுநாள் பசித்திருந்துபோவது அழகல்ல, அறமல்ல அடியேனுக்குப் புகழல்ல எழுந்திருந்துவாரும், என்று இதவாகப்பேசி மனைக்குள் ளழைத்துச்சென்று நெய்யளாவிய அன்னமும்-அறுசுவை பதார்த்தமும் - பாயசம் வடை பணிகாரங்களுடன் படைத்து, ஆசையுமன்பும்பொருந்தத் தானுந் தன்பெண்சாதியுமாக உண்பித்து தானுமுடனேயுண்டு இருவரும் கரம் வாய் பூசி, ஆசமனியமருந்திக் களைதீர்ந்து ஓரிடத்தில் உட்கார்ந்து ஒருவருக்கொருவர் பேசவேண்டிய தருமாகசியங்களைப் பேசிக்கொண்டு வருகிறார்கள். அப்போது பிருகுவென்னுமந்தணன் தானனுஷ்டித்து வருகின்ற இயல்பெல்லாம் பேசி பரமதருமம் அறியவேண்டிய பான்மையால் வந்தேனென்றுபகர்ந்தான், அவ

னுடைய சரித்திரங்களைச் சாற்றி தருமபத்தினி கிடைத்திருக்கின்ற தவத்தினால் சிவத்தைமறவாச் செல்வம்பெற்றிருக்கின்றேனென்று செப்பிப் பின்னுஞ்சொல்லுகிறான்.

ஐயா வேதவித்தகனே! ஆத்மவிமுத்தி அடைகிறவர்களுக்கு அதிதீவிரபக்குவமும் அனுயாசமாகிய பேரறிவும் தனக்குத்தானே வந்து கைகூடும்படி நல்வினை நடத்திவைக்கும். எல்லாவற்றிற்கு மேலான தருமமான துளங்கப்பதார்த்ததின்பேரிலும் இச்சைவையாதது, அதுதான் பரமசிவம் அதுவே பரதருமம் இச்சைப்படுவது அபாதருமம், அந்த இச்சைவிட்டேனென்பது வாசகப்பாடன்றி வாச்சயப்பாடன்று அகமும்-மனமும்-ஒத்து ஒருமையாய் நிராசைப்படுவானாகில், அவனெவனானபோதிலும் உடனே முத்திபெறுவன் அவனுக்கு எல்லாக் காரியங்களும் பொருந்திக் கைவல்லியமாம். நினைத்தது சித்தியாம் அவனெத்தனைகாலமிருந்தாலும் மாயாதேக வருத்தமின்றிச் சாயாதேகச் சம்பிரமத்துடனிருப்பான் அவன்தான் அகங்கையில் மோட்சத்தைவைத்துக்கொண்டிருப்பவன் சோதிரூபமாகிய சூரியனிற்கலந்து சுடராயிருப்பவன் சுகதுக்க மற்றவன் தூக்கமேக்கம் விட்டவன், சோதிரூபமாகிய சூரியனிற்கலந்து சுடராயிருப்பவன் என்று சொல்லக்கேட்ட பிருகுவானவன் அதிகலாபம் பெற்றவர்போல் மகிழ்ந்து பரவசமாகி, ஐயா! நெடுநாளிருந்த சந்தேகங்களை ஒருநிமிடத்திற்றெளியப்படுத்தினீர். இன்றுமுதல் உம்மை என்பங்குத்தெய்வமென்றேற்றிப்போற்றி வருவேன் என்றுசொல்லி அவனுடைய பெண்சாதியாகிய தருமசீலியினிடத்தும் வார்த்தையாடி, தாயே இவ்வுலகமாதாவாகி அறம்வளர்த்த அம்மணிக்குச்சமானமாக உம்மை என்னேரமும் நான் சிந்திக்கவேண்டியது நீரிக்கற்புடன் கணவரோடுங்கூடி வாழ்திர் என்றின்சொலுரைத்து இருவரிடத்திலும் விடைகொண்டு ஸனக-ஸனந்த-ஸனற்குமார-ஜனார்த்தனர் முதலிய பேர்களுங் கொண்டாடப்பட்டஅப்பிருகு தன்னிருப்பிடத்திற்குச் செல்லப் பிரயாணமாயினன். அப்படி பிரயாணங்கொண்டு வரும்போது வழியிற் சவனகமகாரிஷியின் ஆச்சிரமத்திற்குச்சென்று, ஐயா! தேவரீர்போதித்த அடையாளப்படிக்குப் போய் இல்லறவாழ்விலுயர்ந்த அந்தப் பதுமராஜனைக் கண்டு பரமதருமார்த்தம் பக்குவமாயுணர்ந்துகொண்டேன் இந்த ரகசியத்தைத் தெரியப்படுத்தியது தேவரீருடைய புண்ணியமே என்றுரைத்துத் தன்னுடைய யதாஸ்தானப்போய்ச்சேர்ந்தான்

ஓ தேவேந்திரனே! அன்றுமுதலாக அப்பிருகுவென்னு மந்தணன் ஒன்றிலும் பற்றில்லாதவனுய்ச் சிலநாளிருந்து, பூப்பிரதக்ஷணம் புரிந்துவருகின்ற புண்ணியனிடத்திற் பொருந்திப் பாலு நீரும்போலக் கலந்துபோயினுன் இதுதான் ஆத்ம முத்தியென்பது இந்த அற்புதங்களை மகாசந்தோஷத்துடன் பார்த்துவந்தேன் என்று நாரதபகவான் சொல்லவு மேகநாதனுக்கு மேலான மெய்யறிவுவந்து தானும் பரமதருமம் இதுவென் றுணர்ந்து,' ஓ பூமண்டலமெல்லா நொடியிற்போய் வருகின்ற புனிதனே! உம்மாலே இந்தத் தருமந்தெரிந்தேனென்று தோத்திரம் பண்ணி வணங்கினுன் அவிரவனை ஆசிர்வதித்துச் செலவு பெற்றுக்கொண்டு தன் னெதாஸ்தானத்திற்குப் போயினுர்.

நாரதமுனிவர் தேவேந்திரனுக்கு ஆத்மமுத்தியை
சுட்டிக்காட்டியது-முற்றிற்று.

---

## நாரதர் பரப்பிரம்ம
# தெரிசனஞ் செய்தது.

மூலக்கமலத்தில் முளைத்த முதல்வனை பிரமனுடைய மகனுகியநாரதர் பூமண்டலமெல்லாந் திரிந்து மகதியாழ்பாடி வரும்போது பதரிகாச்சிரமத்தின் வழியாய்வந்து அங்கிருக்கப்பட்ட மகானுபாவராகிய நாராயணமூர்த்தியைக் கண்டு, அவரிடத்தில்மிகமதுரவாசகமாய் இதனைப்பேசினுர். ஓ ஐயரே! ஆன்மாவானது சொல்பமான துருத்திபோன்ற பருத்தவுடலை யெடுத்ததற்குப் பயனென்ன வென்று விசாரிக்கு மளவில் பரப்பிரமத்தை உள்ளும் புறம்பும் ஒத்திருக்க ஏகசோதிமயமாய்க் காண்பதே உறுதியென்பதாய்ப் பெரியோர்களெல்லோரு மிசைத்திருக்கின்றுர்கள். ஓ நடலைக்குற்றங்களைக் களைந்த நாராயணரே! அந்தச் சூட்சத்தை அடியேனுக்குத் தேவரீர் அருள்செய்யக் கோருகிறேனென்று வினவ, நாராயணர்சொல்லுகின்றுர் ஓ நாரதரே! இப்போது நீரிசைத்தசோதியை உள்ளும்புறம்பும் பார்ப்பதே உண்மைக்கியானம் உள்ளே யெந்தவானந்தத்திற் கண்டானே? அந்த வானந்தமாகப் புறப்பிலுங் காணவேண்டும் இதல்லாமல்-மகாமேருவுக்கு வடபுறத்திற் போகிறபேர்களுக்கெல்லாஞ் சுத்தமுத்தியென்று சுருதியும் ஆகமங்களுஞ் சொல்லுகின்றன. சுத்தாத்துமாக்களெல்லாம் அங்

குள்ள சுவேதவனத்திலிருக்கின்றார்கள் அங்கிருக்கின்ற ரிஷிகளி யாவரும் வெளுப்பாயிருப்பார்கள் அங்கே மெய்யல்லது பொய் யென்பதில்லை. இவ்வித வியல்போடுங்கூடி யெண்ணற்றவராயிரு க்கின்ற அவர்களெல்லாஞ் சக்கிராங்கிதனாகிய விஷ்ணுவைச் சதா காலமு நினைத்து, சந்தி செப மந்திரமுதலிய யாவும் அச்சோதிக் கே வகுத்துச் சலனமில்லா திருப்பவர்கள். அப்பேர்ப்பட்டவர் கள் தான் அந்த வருட்சோதியைத் தரிசிப்பார்கள். ஓ வேதமு னியே! நீரும்போனாற் காணலாமென்று நாராயணர்சொல்ல நார தர் மனமகிழ்ந்து மேருவுக்கு உத்தரபாகத்திற்சென்று நாராய ணர் நவின்ற சாட்சியெல்லாங்கண்டு மீட்டும் பூலோகத்திற்கு வந் து சகலருக்கும் விளம்பினார். வசுவென்னுராஜன் அந்தப் பிரகாச வெளிச்சத்தைக்கண்டு மோட்சமடைந்தான். சிவசிருஷ்டி செய் கின்ற பிர்மகுமாரனாகிய அத்திரிமகாரிஷியும் அந்த ஒளியைப்பா ர்த்து உள்ளந்திருந்தினார். (பின்னிகழ்ந்த துவாபர யுகத்திலும் சர்வாத்மாக்களை புனிதமாக்கும்படி சர்வலோகத்திலும் நாரதர் விளம்பலாயினார்.)

நாரதர் பரப்பிரம்ம தெரிசனம்செய்தது முற்றிற்று.

---

## நாரதர், இந்திரன் நந்தனவனத்தில் செய்த கலகம்.

முன்னாளில் இந்திரன் பூந்தோட்டத்தில் நாரதர் வந்தபோ து இந்திரனுக்கும் அமரர்களுக்கும் நடந்ததைச் சொல்லுகின் றேன். ஞாபகத்தோடும் கேட்பீராக. நாரதர், நந்தனவனத்தில் அரம்பையர் நடுவே இருந்து அவர்முகத்தே மயங்குற்ற நோக்க முடைய இந்திரனைக்கண்டார். கண்டவளவில், அவ்விந்திரன் எழு ந்து அவருக்கு அன்போடு ஆசனங்கொடுத்தான். தேவமாதர்கள் வலாசுரனையும் விருத்திரா சுரனையுங்கொன்ற அந்த இந்திரன் எழுந்ததைப்பார்த்துத் தாமும் மிகுந்த பயபத்தியோடும் தலைவ ணங்கி நின்று அத்தேவரிஷியைத் தொழுதார்கள். இங்ஙனம் அவர்களாற் பூசிக்கப்பட்ட அந்தநாரதர் இந்திரன் தன்னாசனத்தி லிருந்தபின்பு, தக்கபடி இனிய வார்த்தையாடி நல்ல கதைகளைச் சொல்லிக்கொண் டிருந்தனர். அப்போது இந்திரன் அம்முனி வரைநோக்கிச் சொல்லத்தொடங்கினான்.

சுவாமீ! இவள் அரம்பை, இவள் மிசிரகேசி, இவள் ஊர்வசி, இவள் திலோத்தமை, இவள் கிருதாசி, இவர்கள் மேனகை முதலியவர்களாம். இத்தாசிகளுள்ளே தேவரீர்க்கு யாரிடத்தும்விருப்பமோ அவளைப் பணிசெய்வதற்குக் கட்டளையிட்டருளும்என்றான். அதுகேட்டு முனிவரிற்சிறந்த நாரதர் சிறிது ஆலோசித்து பயபத்தியோடும் எதிர்நிற்கும் அந்த அரமாதர்களைநோக்கி, இதனைக் கூறலாயினர். நம்மனைவருள்ளும் யார் அழகினாலும் உதாரமுடைமையாலும், நற்குணத்தாலும் தன்னைச்சிறந்தவளாக வெண்ணியிருக்கின்றாளோ அந்த மாது என்னெதிரே நடனஞ்செய்க. குணம், வடிவமில்லாதவளுக்கு நடனத்திற் சுவையுண்டாகாது நல்லசார்புடைய கூத்தேகூத்து. அல்லாதது பகடிக்கூத்துப்போலாம் என்றனர். அங்ஙனம் அவர் சொல்லியவளவிலே, அவ்வரமாதருளோவ்வொருத்தியு மெழுந்து நாரதரைவணங்கி நான் குணவதி, நான் குணவதியென்றுகூற, மற்றொருத்தி நீயல்ல நீயல்லவென்று மறுத்துநிற்க, இறைவனாகிய இந்திரன் அவர்கள் விரைவையும் ஊக்கத்தையும்நோக்கி, உம்முள் யார் குணவதியென்று கூறும்படி அம்முனிவரைக் கேளுங்களென்றுகூறினான். கூறவே அவ்விந்திரன் கருத்தின்படிநடக்கும் அந்த நாரதர்களும் அவ்வாறே நாரதரை வினவினர். அப்போது அந்தநாரதர் சொன்னசெய்தியைச் சொல்லுகின்றேன் கேளும்,

மலையரசினிடத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கும் முனிவர்க்கரசாகிய தூருவாசரை நம்மில்யார் மனத்திற்காமமுண்டாம்படி செய்து வருத்தவல்லவளோ, அவளே குணவதியாக நான்கொள்வேன் என்று நாரதர்கூறினர். அவ்வுரைகேட்ட அரமாதர் யாவரும் நடுங்கிய வுள்ளத்தினையுடையவர்களாய் இது எம்மாலாவதல்ல என்றுசொல்லிப் பின்னிடைந்தனர். அவருள் வபு என்பவள் அம்முனிவரைத் தன்புறுந்துவதில் அஞ்சாத நெஞ்சுடையவளாய் நாரதரைநோக்கி, ஐயரே! அத்துருவாசமுனிவர் எங்குள்ளாரோ, அங்கு இப்போதே போகின்றேன். உடம்பாகிய தேரின்கண்ணே, இந்திரியங்களென்னும் குதிரைகளை மன மென்னுங்கயிறுபூட்டி, புத்தியென்னும் தேர்ப்பாகனால் இழுத்துப்பிடித்துநடத்தும் அப்பெருமுனிவர்மேல் மன்மதன் பாணங்களைவிடச்செய்து இந்திரியக்குதிரைகள் பூண்ட கயிற்றை அறுப்பித்து, சாரதியின் வலிமையைக்கெடுத்துச் சிதறவடிக்கின்றேன். பிரமதேவனேயா

னாலும் விஷ்ணுவேயானாலும் முடிவில் சிவனேயானாலு மாகுக, அவர்களையும், இப்போதே, மன்மதபாணத்தால் மன நோகச்செய்வேன் என்று கூறிவிட்டு வபுஎன்பவள் இமயமலைக்குச்சென்றாள்.

அங்கே தவத்தின்பெருமையால் கொடுமையுள்ள செந்துக்களின் துன்பமெல்லாம் ஒழிந்திருந்த அம்முனிவர் இருக்குமிடத்திற்குச்சென்று குரோசதூரத்தில் நின்று குயில்கூவினாற்போலும் இனிமையான கானம்பாடினள். அப்போது சிறந்தவளாகிய அவ்வரமாது பாடும் இசையைக்கேட்டு அப்பெருமுனிவர் மனத்துள்ளே வியப்பினையடைந்தவராய் இனிய குரலோடுங்கூடிய அப்பெண்ணிருக்கு மிடத்திற்குவந்து, முற்றமுகோடும் கூடியிருக்கும் அவளைப்பார்த்து அம்முனிவர் பெருமான் தமது நெஞ்சினைச் சலிக்கவொட்டாது நிறுத்தி, அவள் தம்மை வருத்தவேண்டியே வந்தவளாக அறிந்து பெருவெகுளிகொண்டு அவளைநோக்கி யொன்று சொல்லத்தொடங்கினர். அந்தரத்திற்றிரியுஞ் சிற்றறிவினையுடையவளே! நீ அழகின் செருக்கினால் தருக்கடைந்து மிகமுபன்று அரிதிற்றேடிய என்தவத்தைக் கெடுத்தலினால் எனக்குத் துன்பஞ்செய்யும்பொருட்டு வந்தாயாதலால் உன் இயற்கையான வடிவைவிட்டு, என்சினத்தினாற் பாவமுற்றவளாய் கருடன்மரபில் பிறப்பினையடைந்து பறவைவடிவுகொண்டு பதினாறியாண்டிருக்கக்கடவை அரமாதருள் இழிந்தவளே! பின் உனக்கு நால்வர்மக்கள் பிறப்பர். அவர்களிடத்திலும் மக்களின்பம்அனுபவியாது ஆயுதத்தாலடிபட்டுச் சுத்தமடைந்து, மீட்டும் சுவர்க்கத்தை யடைவை இதனையினி நீ மறுத்துக் கூறலாகாது என்று, கேட்பதற்கும் அரிதாகிய வன்மொழிகளை, கண் சிவந்து, கைவளைகலிக்க நடுங்கி நின்ற அவ்வரமாதினுக்குக் கூறிப் பின்பு அம்முனிவர்கோமான் பூலோகத்தை விடுத்து அசைவுடைய அலைகளையும், புகழத்தக்க நன்மைக்கூட்டங்களையு முடைய ஆகாய கங்கையை நோக்கிச் சென்றனர்.

நாரதர் இந்திரன் நந்தனவனத்திற்செய்த
கலகம்-முற்றிற்று.

---

நாரதர் கலகம் இரண்டாம்பாகம்
முற்றுப்பெற்றது.

---

# உயிரெழுத்து மூலிகைமர்மம்.

| | | | |
|---|---|---|---|
| முதற்பாகம் | விலை | அணா | 8. |
| இரண்டாம்பாகம் | ,, | ,, | 8. |
| மூன்றாம்பாகம் | ,, | ,, | 8. |
| நான்காம்பாகம் | ,, | ,, | 8. |

மற்றபாகம் அச்சிலிருக்கிறது.

1. மூலிகைமர்மம் முதலாம்பாகத்தில் பிரமசிருஷ்டியால் உலகத்தி லுண்டாயிருக்கும் 600-வித மூலிகையின் தலையெழுத்துக்களை அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ-ஒ-ஓ- ஆகிய உயிர்மெய்யெழுத்துகளின் வரிசைக்கிரமம் போல் பெயர்களைப் பிரித்து ஒவ்வொரு மூலிகையால் நிவர்த்தியாகக்கூடிய வியாதிகளையும் அந்தந்த வியாதிகளுக்கு இன்னின்னவிதமாய் உபயோகிக்க வேண்டுமென்ற செய்முறைகளையும் ஆயுர்வேத விதிப்படி அச்சிட்டிருக்கின்றது. உயர்ந்த பதிப்பு.

2. மூலிகைமர்மம் இரண்டாம்பாகத்தில் அளவிரந்த ரோகபாகங்களை அங்கன் ஸியாச விதிப்படி எண்ஜாணுடலுக்கும் சிரசே பிரதானமாகையால் சிரரோகம், நேத்திரரோகம், தந்தரோகம், நாசிரோகம், செவிரோகம், சுரரோகம், கண்டமாலை, அறையாப்பு பிரமியம், மூலம், பவுத்திரம், நீரடைப்பு, நீர்க்கட்டு, தாருட்டிய விருத்திமுதலான, ரோகபாகங்களை பாதாதிகேசம் வரையில் அங்கம்பிரித்து கைபாகம் செய்பாகத்தோடு அச்சிட்டிருக்கின்றது. உயர்ந்தபதிப்பு.

3. மூலிகைமர்மம் மூன்றாவதுபாகத்தில் அஷ்டகர்மமென்னும் வசிய மூலிகை, மோகனமூலிகை, தம்பனமூலிகை, உச்சாடனமூலிகை, ஆகிருஷ்ண மூலிகை வித்துவேடன மூலிகை பேதனமூலிகை மாரணமூலிகை ஆக (எட்டெட்டு) 64 மூலிகையும் இன்னின்ன பாகத்திற்குபயோக மாகுமென்பதையும் அவைகளை யெடுப்பதற்கு அதர்வணவேதப்படி காலம் வாரம் ஒரைபூசை மந்திரம் யிவற்றுடன் சொல்லியிருப்பது மன்றித்திரளான அனேகரோகசாந்தி மூலிகையும் செய்பாகமும் அச்சிட்டிருக்கின்றது. உயர்ந்த பதிப்பு.

4. மூலிகைமர்மம், நான்காம் பாகத்தில், பெண்பாலுக்குரிய, வியாதி கூட்டங்களை, அங்கப்பிரித்து, பிள்ளையில்லாதவர்க்கு, பாலில்லாதவர்க்கு பால் அதிகப்பட்டவர்களுக்கு, ருதுவில்லாதவர்க்கு, மாதமுழுக், கில்லாதவர்க்கு, சூதகக்கட்டுக்கு, பெரும்பாட்டுக்கு, ஜன்னிகளுக்கு, இம்மாதிரி ரோகபாகங்களைப், பிரித்து பற்பல துடர்வியாதிகளுக்கும், இளவியாதிகட்கும் வைரியான அனேக அரியபெரிய மூலிகையின் உபயோகம் யாவத்தும் கைபாகம் செய்பாகத்துடன் அச்சிட்டிருக்கின்றது. உயர்ந்த பதிப்பு.

நான்குபாகமும் ஒரேகட்டடமாய் வாங்குவோருக்கு

புல்காலிக்கோ இலிட்டு பயிண்டு செய்து அனுப்பப்படும்.

விலை ரூ 2—0—0 முழுப் புத்தகம்.

இவைமுழுதும்

திருமணவூர் முனிசாமிமுதலியார் பதிப்புகள்.

# புதியபுத்தகவிளம்பரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மூலிகைமர்மம் முதற்பாகம் | விலை | அணா | 0 | 8 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| ஷை நான்குபாகமும் ஓரேகட்டடம் புல்காலிகோபைண்டு | | ரூபா | 2 | 0 | 0 |
| நாரதர் கலகம் முதற்பாகம் | விலை | அணா | 0 | 6 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்குபாகமும் ஓரேகட்டடம் புல்காலிகோ பைண்டு | | ரூபா | 1 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை முதற்பாகம் | விலை | அணா | 0 | 6 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை மூன்றாம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்காம்பாகம் | ,, | ,, | 0 | 6 | 0 |
| ஷை நான்குபாகமும் ஓரேகட்டடம் புல் காலிகோ பைண்டு | | ரூபா | 1 | 8 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி | விலை | ரூபா | 2 | 0 | 0 |
| ஷை இங்கிலீஷில் | ,, | ,, | 2 | 0 | 0 |
| இங்கிலீஷ்தமிழ்வயித்தியசிகாமணி | ,, | ,, | 3 | 0 | 0 |
| ஜோதிடசிகாமணி மூலம் உரை | ,, | ,, | 3 | 0 | 0 |
| சண்டாளர் சகவாசம் | விலை | அணா | 0 | 8 | 0 |
| தெய்வகுண வெளிச்சம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| அகடவிகட சம்சாரி | ,, | ,, | 0 | 4 | 0 |
| விவாகசாஸ்திரம் | ,, | ,, | 0 | 4 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | ,, | ,, | 0 | 8 | 0 |
| விஷவயித்திய சிந்தாமணி | ,, | ,, | 0 | 12 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் | ,, | ,, | 0 | 12 | 0 |
| கொழுத்தச் சிறிப்பு | ,, | ,, | 0 | 6 | 0 |

இன்னும் அனேக தினுசுகளுண்டு.